# கல்கி

KALKI 2.9.90 ரூ. 2.50



## அரசியல் சாதிக்காததை ஆன்மிகம் சாதிக்கிறது!

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம். ரூ. 50/- பரிசு பெறும் மாணவர் கட்டுரை.**



கட்சியின் கட்டுக்கோப்பான செயல்பாடு, தோல்வி கண்டு துவளாத திண்மை, இளைஞரணியினரின் இடைவிடாத செயல்பாடுகள் முதலியவற்றால் பதின் மூன்று வருடங்களுக்குப் பின்பு, ஆட்சியைக் கைப்பற்றியிருக்கும் தி. மு. க., தனது இரண்டாண்டுகால ஆட்சியில் செய்திருக்கும் சாதனைகள் ஏராளம்; சோதனைகளும் தாராளம்தான்.

# தி.மு.க. ஆட்சி: சாதனைகளும் சோதனைகளும்

தமிழகத்தில் தொழில் வளர்ச்சி குறைவு என்பதை நன்குணர்ந்து, மெய்யான, முழுமையான ஆர்வத்தோடு திட்டங்கள் பல வகுக்கப்பட்டிருப்பதோடு, தொழில் வளம் பெருகப் பல சலுகைகளும் வழங்கப்பட்டுள்ளன. ஐம்பது கோடிக்கு மேல் முதலீடு செய்து தொடங்கப்படும் தொழில்களுக்குச் சிறப்பான விற்பனை வரிச்சலுகை, பிற்பட்ட வட்டங்களில் தொடங்கப் படும் தொழில்களுக்குச் சிறப்புச் சலுகைகள், மின்சார உற்பத்தியை அதிகரிக்கப் பல புதிய திட்டங்கள் என்றெல்லாம் யோசித்துச் செயல் படுகிறது தி. மு. க. அரசு.

பல வருடங்களாகத் தஞ்சை, இதர காவிரிக்கரை விவசாயிகளுக்கு ஒரு தலைவலியாக இருக்கும், காவிரி நீர்ப் பிரச்னைக்கு ஒரு தீர்வு காண, நடுவர்குழு அமைப்பதில் வெற்றி பெற்றிருப்பது, தி. மு. க வின் சாதனைகளில் ஒன்று.

தி. மு. க ஒரு மாநில அளவிலான கட்சியே; குறுகிய மனப்பான்மையுடையது என்ற அவப்பெயரை நீக்கி, தேசிய முன்னணி என்ற தேசிய நீரோட்டத்தில் கலந்திருப்பதும் தி. மு. க வின் பெரும் சாதனையே ஆகும்.

பட்டதாரிப் பெற்றோர்கள் அற்ற, பிற்படுத்தப்பட்ட குடும்பத்தில் இருந்து வரும் மாணவருக்குக் கல்லூரிகளில் கூடுதல் மதிப்பெண் போடுதல் மாணவருக்கு இலவச பஸ் பாஸ், சாதி வேறுபாடு இன்றி அனைத்துப் பெண்களுக்கும் பட்டப்படிப்பு வரை இலவசக் கல்வி, மாதம் இருமுறை சத்துணவுடன் முட்டை கொடுத்தல், தொழிலாளர்கள் இறந்தால் நஷ்டஈடு, ஏழைப் பெண்களுக்குத் திருமண உதவி, தாய்மையுற்ற ஏழைப் பெண்களுக்கு உதவித் தொகை, பெண்களுக்கு 30 சதம் வேலை வாய்ப்பு ஒதுக்கீடு இலவச அரிசி, இலவச உடைகள் போன்றவையும் தி. மு. க. ஆட்சியின் செல்வாக்கை மக்களிடையே உயர்த்தியுள்ளன.

இத்தனை சாதனைகள் இருப்பினும், நீக்க முடியாத பல களங்கங்களும் ஏற்பட்டுள்ளன. சட்டசபையில் நடந்த அருவருக்கத்தக்க கலவரம், எதிர்க் கட்சித் தலைவியின் நடவடிக்கைகளைக் கண்காணித்தது, தகாத முறையில் நடந்து கொண்டது, அவருக்கு நேர்ந்த விபத்து போன்றவை மக்களிடையே தி. மு. க மீது வெறுப்பைத் தோற்றுவித்துள்ளன.

இவை தவிர ஆட்சியின் மீது ஏற்பட்ட துடைக்கமுடியாத கறை மலிவுவிலைச் சாராய உற்பத்தி, விநியோகம். இது தாய்மார்களின் அதிருப்தியைப் பெருமளவு சம்பாதித்துக் கொடுத்துள்ளது.

முதல்வர் போராளிகளுடன் பேச்சு வார்த்தை நடத்துவதாகக் கூறி அது பயனற்றுப் போனதும், அமைதிப்படையை வரவேற்க அவர் செல்லாததும் பலரின் அதிருப்தியையும் கட்சிக்குப் பெற்றுத்தந்துள்ளன என்பதில் ஐயமில்லை.

தி. கவினர் சிறுபான்மையினராகிய பிராமணர்களை இழிவாகப் பேசுவதும், அவமதிப்பதுமாக இருக்க, அதையுணராது "சிறுபான்மையினர் அடக்கத்துடன் நடந்து கொள்ள வேண்டும்" என்று ஒருதலைப் பட்சமாகக் கூறுவது முதல்வருக்கு மக்களிடையே மதிப்புக் குறைய வழிவகுக்கும். பழனி தேர்தலின் போது தி.மு. கழகத்தினர், 'பிற கட்சியினருக்கு ஓட்டளித்தால் வாக்காளர்கள் ஒரு நல்ல தாய்க்குப் பிறந்தாரல்லர்' என்பது போன்ற மோசமான வார்த்தைப் பிரயோகங்களைச் செய்து மக்களின் ஆதரவு தங்கள் கட்சிக்குக் குறையும் விதத்தில் நடந்து கொண்டனர்.

பத்திரிகைகள், உளவுத்துறை, எதிர்க் கட்சிகள், தேசிய முன்னணித் தலைமை ஆகியவை ஒன்று விடாமல் எச்சரித்தும்

அவற்றை அலட்சியம் செய்து தமிழகம் படு பயங்கரக் கொலைகள் நடக்குமிடமாக வழி வகுத்தார் முதல்வர். எங்கு பார்த்தாலும் மக்களிடம் பீதியும், பயமும் குடி கொண்டிருக்கின்றன. வேதாரண்யம், மீமிசல் பகுதிகளில் விடுதலைப்புலிகளின் நடமாட்டம் நீடிக்கிறது. தமிழக மீனவர்களை அடிக்கடி சிறைப் பிடித்துப் பணயக்கைதிகளாக வைத்து மிரட்டுதல் தொடர்கிறது. நமது மீனவர்களின் படகுகளை உபயோகித்து ஆயுதங்கள் கடத்துதல், மற்ற பல அத்தியாவசியப் பொருள்களைக் கடத்துதல் ஆகியன நின்றபாடில்லை. தி. மு. க. அரசு இவ்விஷயங்களில் தீவிர நடவடிக்கை எடுக்காதது தமிழகத்துக்கு ஏற்பட்ட பெருஞ் சோதனையாகும்.

சாதனைகளும், அவற்றை விஞ்சும் சோதனைகளும் மேலும் ஏற்பட்டால், சோதனைகளே மக்களை அதிகமாகப் பாதிக்கும் என்பதை உணர்ந்து தமிழகத்தில் நல்லாட்சி மலர தி. மு. க. பாடுபடும் என நம்புவோமாக!

— கே. பாலகார்த்திகா,
அரசினர் பெண்கள் மேல்நிலைப் பள்ளி, புதுக்கோட்டை.

## பழிவாங்கும் முயற்சி வேண்டாம்!

தி. மு. க. அரசு ஆட்சிக்கு வந்த பிறகு, நஷ்டத்தில் ஓடிய பல தொழில் நிறுவனங்கள் லாபத்தில் ஓட ஆரம்பித்திருக்கின்றன. சிறு தொழில்கள் கணிசமான அளவுக்கு முன்னேற்றம் கண்டிருக்கின்றன. புதிதாய்ப் பல தொழிற்சாலைகளும் தொடங்கப்பட்டுள்ளன. ஆனால் யானை தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்வது போன்ற சில நடவடிக்கைகளையும் அரசு எடுத்து வருகிறது. தாங்கள் எதிர்நோக்க வேண்டிய பல பிரச்னைகள் இருக்கும் பொழுது, முந்தைய அரசின் ஆதரவாளர்களை நசுக்குவது என முடிவு செய்துள்ளது போன்று செயல்படுகிறது.

இதற்கு ஒரு நல்ல உதாரணம் எம். ஏ. சி. குரூப். இந்த குரூப்பை ஓரங் கட்டும் முயற்சியில் அரசு தீவிரமாக இறங்கியுள்ளது. பழிவாங்கும் முயற்சியைக் கைவிட்டு, சமநோக்குக் கண்ணோட்டத்துடன் செயல் பட்டால் தொழில் துறை மேலும் செழிக்க முடியும்.

— எஸ். சிவானந்தவல்லி,
அஞ்சல்வழிக் கல்வி,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

## கம்பிக்குள் இருக்க வேண்டியவன் காட்டுக்குள் இருக்கிறானே?

கடந்த சில மாதங்களில் மூடிக்கிடந்த எட்டு தொழிற்சாலைகள் திறக்கப்பட்டுள்ளன. இது உண்மையில் பாராட்டப்படக்கூடிய சாதனை. இதனால் எத்தனையோ தொழிலாளர்கள் வீட்டில் அடுப்பு எரிகிறது. ஆனால் அதே சமயத்தில் பல இலவசத்திட்டங்களை அரசு அறிவித்து இருப்பது மிகுந்த வேதனை.

மேலும் தி. மு. க. ஆட்சியில் மாவட்டங்களின் பெயர்களை மாற்றுதல், கல்லூரி, கட்டடங்களின் பெயர்களை மாற்றுதல் போன்ற வேதனை அளிக்கும் செயல்கள் நடந்துள்ளன. இதே நிலை நீடித்தால் மக்கள் தி.மு.க. ஆட்சியை மாற்றிச் சாதனை புரிந்து விடுவார்கள். கம்பிக்குள் இருக்க வேண்டிய வீரப்பன் (சந்தனக் கடத்தல்) காட்டுக்குள் இருப்பது காவல் துறையின் மெத்தனப் போக்கைக் காட்டுகிறது.

— இரா. அருள்மொழி,
மேல் மருவத்தூர் ஆதிபராசக்தி
பொறியியல் கல்லூரி.

## பாதி நிர்வாகம் கண்மணிகள் கையில்!

குடும்ப நலத் திட்டத்தில் எண்ணற்ற கோளாறுகள் காணப்பட்டாலும், உண்மையிலேயே குடும்ப நலத் திட்டத்தில் தமிழகம் சிறப்பிடம் வகிப்பது உண்மை தான். அடிமட்ட மக்கள் வரை குடும்ப நலத்திட்டத்தை அறிந்து வைத்திருப்பது அரசின் வெற்றி தான். மேலும் ஒரு குழந்தை மட்டும் பெறுவோருக்குப் பண உதவி செய்தல் போன்றவை உண்மையிலேயே குடும்ப நலத் திட்டத்தை வளரச் செய்ய உதவும்.

காலம் காலமாக நமக்குக் குடிதண்ணீர்ப் பிரச்னை இருந்து வந்தாலும் அதைப்பற்றி அரசும், ஆளுவோரும் துளிக்கூடக் கவலைப் படாமல் தங்களுடைய வாய் ஜாலத்தாலும், கற்பனைத் திட்டங்களாலும் தண்ணீர்ப் பிரச்னையை மறைக்க முயற்சி செய்கின்றனர்.

நிர்வாகத்தை எளிமைப் படுத்தவும், துரிதப் படுத்தவேண்டிய காரணத்தாலும் கழகக் கண்மணிகள் பாதி நிர்வாகத்தைக் கையாளுவதால் கையூட்டும் (லஞ்சம்) இரு பாதியாகப் பிரிக்கப்பட்டு முறையே அதிகாரிகளுக்கும், உடன் பிறப்புகளுக்கும் வழங்கப்படுகிறது!

மாற்றுக் கட்சியினரையும் மதிப்போம் என்று சொல்லி விட்டு அவர்கள் நல்ல முறையில் நடத்தி வரும் நிறுவனங்கள் போன்றவற்றை முடக்கித் தனது கட்சி துவேஷத்தை காட்டுகிறது அரசு. (வேலூர் இன்ஜினியரிங் கல்லூரி விவகாரம்)

— கே. காதர் ஷா,
தியாகராசர் கல்லூரி, மதுரை.

# படங்களில் பிரபலங்கள்

கருத்து: ஜூலி

பிரபலங்களைப் படத்தில் நடிக்கச் செல்வது வழக்கமாகி வருகிறது. எந்தெந்த ரோலுக்கு யார் யாரைப் போடலாம்? யோசிக்க வைத்த வாசகர்: நெல்லை ஜூலியஸ், 12/58, ... வீதி, பொட்டல்புதூர், நெல்லை மாவட்டம், – 627 423.)



# காஷ்மீர்க் குடும்பங்களின் கண்ணீர்க் கதைகள்...



* அமிகஞ்ச்சில் உள்ள முகாம்...

சமீப காலம் வரை, காஷ்மீர் என்றவுடன் அப் பள்ளத்தாக்கின் இயற்கை அழகும், படகு வீடுகளும், வேலைப்பாடுடைய கம்பளங்களும்தான் நம் நினைவுக்கு வந்தன. ஆனால், இன்றோ, காஷ்மீர் விடுதலை முன்னணியினரின் "ஆஸாதி, ஆஸாதி" என்ற கூச்சல்களும், தீவிரவாதிகளின் நாச வேலைகளும், துப்பாக்கிக் குண்டுகளும் நம்மை அச்சுறுத்துகின்றன. இலட்சக்கணக்கான உல்லாசப் பயணிகளையும், தேனிலவு தம்பதிகளையும் கவர்ந்த ஸ்ரீநகரின் தால் ஏரியின் படகு வீடுகள் இன்று கேட்பாரற்றுக் கிடக்கின்றன. ஏரியைச் சுற்றியுள்ள மூன்று, நான்கு நட்சத்திர ஹோட்டல்களில், இன்று காவல் படையினர் (C RPF) தான் விருந்தாளிகள்!

இந்த ஆண்டின் துவக்கத்திலிருந்துதான் நிலைமை அத்துமீறிப் போய்க் கொண்டிருக்கிறது. காஷ்மீர் சுதந்திரப் போராட்ட வெறியர்களின் ஊர்வலங்கள்; மசூதிகளிலிருந்து "இந்திய நாய்களே திரும்பிப் போங்கள்," "அல்லா ஹோ அக்பர்", "பாகிஸ்தான் வாழ்க" போன்ற கோஷங்கள்; ஊரடங்கு உத்தரவு; துப்பாக்கி ஏந்திய காவல்படையினரைத் தவிர மற்றபடி வெறிச்சோடிய காஷ்மீர் வீதிகள் — இதுதான் இன்றைய காஷ்மீர்ப் பள்ளத்தாக்கு.

இந்தச் சூழ்நிலையில் இனியும் அங்கு வாழ முடியாது என்ற பயத்தில், சிறுபான்மையிரான இந்துக்கள் காஷ்மீர்ப் பள்ளத்தாக்கை விட்டுப் பாதுகாப்பான இடத்தை நோக்கி ஓட ஆரம்பித்தார்கள். காஷ்மீர்ப் பள்ளத்தாக்கின் மொத்த ஜனத் தொகையில், இந்துக்கள் நான்கு சதவிகிதமே. காஷ்மீர் பண்டிட் வகுப்பைச் சேர்ந்த இந்த இந்துக்களில் உத்தேசமாக முக்கால்வாசிக் குடும்பங்கள் இன்று காஷ்மீரை விட்டு வெளியேறி விட்டன. இரவோடு இரவாக உடுத்த உடையுடன், தங்களுடைய வீடுகளையும், மற்ற உடைமைகளையும் போட்டது போட்டபடி விட்டு விட்டு வெளியேறிய நாற்பதாயிரத்திற்கும் மேற்பட்ட இந்த அகதிகள் ஜம்முவின் பல முகாம்களில் தங்கியிருக்கிறார்கள்.

ஜம்முவைக் கடந்து தில்லி வரையில் பல காஷ்மீர்க் குடும்பங்கள் அடைக்கலம் தேடி ஜனவரி மாதத்திலிருந்த வர ஆரம்பித்தார்கள். இப்படி தில்லியை நோக்கி வந்த காஷ்மீர் பண்டிட்கள், தில்லி லஜ்பத் நகரில் உள்ள 'காஷ்மீர் சமிதி' என்ற அவர்களுடைய சமூக, கலாசார அமைப்பில் தஞ்சம் புகுந்தார்கள். நாளுக்கு நாள் இவர்களின்



* ''நாங்களும் கொடியை விட்டுவிட்டுத் துப்பாக்கியைப் பிடிக்கவேண்டியதுதான்...'' என்று உணர்ச்சி வசப்படுகிறார் வினோத்குமார்.



* லசபத்நகர் முகாமில் உள்ள இளைஞர்கள் பேசுகிறார்கள்...

எண்ணிக்கை பெருகவே, தில்லி நிர்வாகம் தில்லியிலுள்ள கம்யூனிட்டி சென்டர்களில் இக் குடும்பங்கள் தங்குவதற்கு ஏற்பாடு செய்துள்ளது. இதுவரையில் பன்னிரண்டாயிரம் காஷ்மீர்க் குடும்பங்கள் தில்லிக்குக் குடி பெயர்ந்துள்ளன.

தில்லியிலுள்ள பத்து முகாம்களில், மூன்று முகாம்களுக்கு நேரில் சென்று அவர்களுடன் பேசினோம். வசதியுடன் வாழ்ந்த இக் குடும்பங்கள், தாய் நாட்டிலேயே அகதிகள் போன்று வாழும் அவல நிலையைக் காணப் பரிதாபமாக இருந்தது. காஷ்மீரை விட்டு தில்லி வரையில் தப்பி ஓடி வந்த பிறகும், இவர்களின் மனத்திலிருந்து பீதி இன்னமும் அறவே அகலவில்லை.

சவுத் எக்ஸ்டன்ஷன், அலிகஞ்ச் முகாம்களில் புகைப்படக்காரரைப் பார்த்தவுடனேயே, தங்களைப் படம் பிடிக்கக் கூடாது என்று பலர் கூச்சல் போட ஆரம்பித்தார்கள். காஷ்மீர் சம்பந்தப்பட்ட தேசிய தொலைக்காட்சி நிகழ்ச்சி ஒன்றில், தாம் பேசிய உடனே, ஸ்ரீநகரிலுள்ள தம்முடைய வீட்டைத் தீவிரவாதிகள் கொளுத்தி விட்டார்கள் என்று ஒரு பெண்மணி குறிப்பிட்டார். பலர் தங்கள் பெயர்களைக் கூட வெளியிடத் தயாராக இல்லை!

நாம் சந்தித்துப் பேசியவர்களில் நேரடித் தாக்குதல்களுக்கு ஆளானவர்கள் வெகு சிலரே. ஆனால், அக்கம் பக்கத்து வீடுகளைப் பயங்கரவாதிகள் சூறையாடுவதும், தீக்கிரையாக்குவதுமே இவர்கள் மனத்தில் திகிலை உண்டாக்கப் போதுமானதாக இருந்தது! மேலும் இவர்களில் பலருக்குத் தீவிரவாதிகளிடமிருந்து இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் காஷ்மீர்ப் பள்ளத்



* படகு வீடுகள்: இன்று காவல்படையினர்தான் விருந்தாளிகள்...

தாக்கை விட்டு ஓடிப் போகும்படி எச்சரிக்கைக் கடிதங்கள் வந்ததாகக் குறிப்பிட்டார்கள். இந்துக்களின் பெயர்களைக் கொண்ட 'ஹிட் லிஸ்ட்' கள் தயாரிக்கப்பட்டு, அவை சுவர்களில் ஒட்டப்பட்டனவாம். உள்ளூர் செய்தித்தாள்களிலும் இஸ்லாமியர்கள் அல்லாதவர்கள் காஷ்மீரை விட்டுப் போய் விட வேண்டும் என்று அறிவிப்புகள் வெளி

வந்ததாக ஸ்ரீநகர் அருகிலுள்ள ஆரம்ப சுகாதார நிலையத்தில் வேலை செய்த டாக்டர் ஒருவர் கூறினார்.

இந்துக்களை மட்டுமல்ல, சீக்கியர்கள் - ஏன் சில இஸ்லாமியக் குடும்பங்களைக் கூட தீவிரவாதிகள் விட்டு வைக்கவில்லை. பிரிவினையை விரும்பாத பத்தாயிரம் முகமதியர்கள் தீவிரவாதிகளின் குண்டுகளுக்குப் பயந்து ஜம்மு முகாம்களில் தங்கியிருப்பதாகச் சொல்கிறார்கள். சீக்கியர்களை, பாகிஸ்தான் கொடியின் நிறத்திற்கு ஏற்பப் பச்சை வர்ணத்தில் டர்பன் கட்டிக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் தீவிரவாதிகள் துன்புறுத்த ஆரம்பித்தார்களாம்! அதனால் தில்லியிலுள்ள சில குருத்வாராக்களிலும், கிருஷ்ணா மார்க்கெட்டிலுள்ள முகாமிலும், சில சீக்கிய குடும்பங்கள் தப்பி வந்து அடைக்கலம் புகுந்திருக்கின்றன.

**கா**ஷ்மீரின் குளிர்ந்த சீதோஷ்ண நிலைக்குப் பழக்கப்பட்ட இக் குடும்பங்கள், தில்லி வெயிலில் படும் அவஸ்தையைச் சொல்லி முடியாது. ஜம்முவில் பல குடும்பங்கள் கூடாரங்களில் தங்கியிருப்பதால், வெயிலின் கொடுமை தாங்காது. இதுவரை முப்பத்து நான்கு பேர் வரை இறந்து விட்டதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. தில்லியிலும் உஷ்ணம் தாங்காது வயிற்றுப் போக்கு, மற்றும் தோல் சம்பந்தப்பட்ட வியாதிகளால் பலரும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். எனவே இந்திரா காங்கிரஸ் கட்சி எல்லா முகாம்களுக்கும் 'ரூம் கூலர்கள்' வைத்துக் கொடுத்திருக்கிறது. பல சேவை நிறுவனங்கள் கட்டில்கள், பச்சைக் கறிகாய்கள் என்று விநியோகித்துத் தங்களால் இயன்ற உதவிகளைச் செய்கின்றன. தவிர, பாரதீய ஜனதா கட்சியினரும் இக் காஷ்மீர்க் குடும்பங்களுக்குப் பணமும், பொருள்களும் கொடுத்து உதவுகின்றனர். இதையெல்லாம் நன்றியுடன் குறிப்பிட்டார்கள் அகதிகள்.

ஆனால் தாங்கள் இப்படி ஒரு கஷ்டமான நிலையில் இருக்கும் போது, பிரதமர் வி. பி. சிங்கோ, தங்கள் ஊரைச் சேர்ந்த உள்துறை அமைச்சர் முப்தி முகமதோ, தங்களுக்கு ஆறுதல் அளிக்க ஒருமுறை கூட வரவில்லையே என்பதை நிரம்பவும் வருத்தத்துடன் குறிப்பிட்டார்கள்.

காஷ்மீர் சமிதியைச் சர்ந்த ஃபட்தேதார் "சிறுபான்மையினர் என்றால்தான் அரசு கவனிக்கிறது. எல்லாமே வோட்டுக்காகத்தான். இப்படிப்பட்ட ஒரு நிலை முகமதியர்களுக்கு ஏற்பட்டிருந்தால், அரசாங்கம் உடனே அவர்களைக் கவனித்திருக்கும். தில்லியிலுள்ள நிஜாமுதினில் இரண்டு பங்களாதேஷ் பையன்கள் கொலை செய்யப்பட்டார்கள். உடனே அமைச்சர் முப்தி ஓடிப் போய் அவர்களின் குடும்பங்களுக்கு ஐம்பதாயிரம் ரூபாய்க்கு செக் வழங்கி விட்டு வந்தார். இங்கே நாங்கள் இவ்வளவு கஷ்டப்படும் பொழுதும் எங்களை ஏன் என்று கேட்க ஆளில்லை" என்று ரொம்ப ஆவேசமாகப் பேசினார்.

**போ**ட்டது போட்டபடி இரவோடு இரவாக வீட்டை விட்டு ஓடி வந்து விட்டார்களே, இப்பொழுது காஷ்மீரிலுள்ள இவர்களின் வீடுகள் எந்த நிலையில் இருக்கின்றன? தங்களுக்கு நிச்சயமாக ஒன்றும் தெரியாது என்று கையை விரிக்கிறார்கள், பலரும். சில வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டிருப்பதாகவும், சில வீடுகளுக்குள் புகுந்து தீவிரவாதிகள் கொள்ளை அடித்திருப்பதாகவும் தங்கள் காதுகளுக்கு எட்டியதாகச் சிலர் சொன்னார்கள். வாசல் கதவில் பூட்டு தொங்கிக் கொண்டிருந்தாலும், பின் வழியாகவோ, ஜன்னல்கள் வழியாகவோ உள்ளே புகுந்து பயங்கரவாதிகள் இவர்களின் வீடுகளைத் தங்கள் ஒளிவிடமாக உபயோகப்படுத்திக் கொண்டிருக்கலாம் என்றும் சிலர் சந்தேகப்படுகிறார்கள்.

பலர், தங்கள் வீடுகளைப் பூட்டி, அக்கம் பக்கத்தில் குடியிருக்கும் முகமதிய நண்பர்களிடம் சாவியைக் கொடுத்து, தங்கள் வீட்டைக் கவனித்துக் கொள்ளும்படி சொல்லி விட்டு வந்ததாகக் கூறினார்கள். காஷ்மீர் கலவரங்களினால், அக்கம் பக்கத்தில்

# ஐடிபிஐ-முதலீட்டுப் பத்திரங்கள்

# முதலீட்டு ஆதாய வரி விலக்குப் பெற ஒரு கவர்ந்திடும் வழி



- ஆண்டு முழுவதும் சமவிலையில் கிடைக்கும்.
- வருமான வரிச் சட்டம், 1961, பிரிவு எண் 54E-ன் கீழ் முதலீட்டு ஆதாய வரி விலக்கு.
- செல்வ வரிச் சட்டம், 1957, பிரிவு எண் 5(1)xvie)-ன் கீழ் செல்வ வரி விலக்கு.
- வருமான வரிச் சட்டம், பிரிவு எண் 80-Lன் கீழ் வருமான வரி குறைப்பு.
- ஆண்டொன்றுக்கு 9% விகிதத்தில் ஆறு மாதத்திற்கொரு முறை வட்டி வழங்கப்படும்.
- முதலீடு செய்தவர் விரும்பினால் 3 ஆண்டுகட்கான மொத்த வட்டியும் தள்ளுபடி முறையில் முன்னதாகவே ஒரே நேரத்தில் வழங்கப்படும்.
- எவ்வித வரியும் வட்டி வழங்கும்பொழுது கழிக்கப்படமாட்டாது.
- வெளியூர்க் காசோலைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அவற்றை மாற்றுவதற்கான செலவை ஐடிபிஐ ஏற்றுக்கொள்ளும்.

Sobhagya-B/89 TAM

மேற்கொண்டு விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஐடிபிஐ ஆபிஸை அணுகுங்கள் அல்லது மானேஜருக்கு எழுதுங்கள்:

**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கஃப் பரேட், கொலாபா, பம்பாய்-400 005.



## புத்தரை ஏசினால்......!

புத்தர் ஒரு வீட்டுக்கு யாசகம் கோரிப் போனார். அங்கே அவரைப் புரிந்து கொள்ளாதவர்கள் அவரைத் தூற்றினார்கள். புத்தர் பதில் கூறவில்லை. தமது சீடர்களையும் பதிலுரைக்க விடவில்லை. அவர் மிருதுவாகச் சொன்னார்:

''ஒருவர் நம்மை ஏசினால், அதனை ஏற்க நாம் மறுத்து மௌனமாகி விட்டால், அந்த ஏச்சு அவற்றைக் கூறியவரையே திரும்பச் சென்றடைகிறது.''

''இந்தக் கதையைக் கூறிவிட்டுப் பாபா சொன்னார்:

''ரிஜிஸ்தர் லெட்டர் வருகிறது; ஏற்க மறுத்தால் அதை அனுப்பியவருக்கே அது திரும்பிப் போகிறது அல்லவா? அப்படித்தான் இதுவும்!'' என்றார்.

**(பாபாவின் சமுதாயப் பணிகளுக்கு இது பொன் விழா ஆண்டு...)**

குடியிருக்கும் முகமதியர்களுடன் தங்கள் நட்பு மாறவில்லை என்றும், தீவிரவாதிகள் தங்களையும் தாக்குவார்கள் என்ற பயத்தினால்தான் வெளிப்படையாக அவர்கள் உதவ முன்வரவில்லை என்றும் குறிப்பிட்டது கவனத்திற்குரியதாகும். ஆனால் இக்கூற்றை உடனே சிலர் கோபாவேசமாக மறுக்கவும் செய்தார்கள். ''காஷ்மீர் முகமதியர்கள் எல்லோருக்குமே, நாங்கள் அங்கிருந்து கிளம்பி விட வேண்டும் என்ற எண்ணம்தான்!'' என்று கூறினார்கள்.

காஷ்மீர் பண்டிட்கள் எல்லோருமே படித்தவர்கள்; குறைந்தபட்சம் பட்டதாரிகள். அரசாங்கத்தில் முக்கிய பதவிகள் வகிப்பவர்கள் காஷ்மீர் இந்துக்களே. தேர்வு, போட்டி என்று வரும் பொழுது, இந்துக்களுக்கே வேலை வாய்ப்புகள் அதிகம் கிடைக்கின்றன. வேலையில்லாத் திண்டாட்டம் உள்ள ஒரு நிலையில், இந்துக்களுக்கும், முகமதியர்களுக்கும் இதன் காரணமாகவும் மனத்தாங்கல். ஜம்மு — காஷ்மீர் மாநில அரசாங்க வேலைகளில் முகமதியர்களுக்கு என்று இட ஒதுக்கீடு உள்ளது. இருப்பினும் மனத்தாங்கல் இருக்கத்தான் செய்கிறது.

அகதியாக வந்துள்ள காஷ்மீர்க் குடும்பத்தினர் எல்லோருமே, தங்களுடைய எதிர்காலத்தைப் பற்றிய குழப்ப நிலையில் தான் இருக்கிறார்கள். தங்கள் சொந்த மண்ணை அவ்வளவு எளிதில் உதறி விட முடியுமா? பல ஆண்டுகளாக அரும்பாடுபட்டு, தொழிலை நிலைநாட்டி, வீடு, நிலபுலன்களுடன் வாழ்ந்தவர்கள் திரும்பிப் போகவே விரும்புகிறார்கள். ''எங்களுடைய பல ஆண்டு கால உழைப்பினால் நாங்கள் சேட்டிய சொத்துக்களை அப்படியே தானம் கொடுத்து விட முடியுமா?'' என்று கேட்கிறார்கள்.

ஆனால், முழுக்க முழுக்க இளைஞர்கள் மட்டுமே தங்கியுள்ள லாச்பத் நகர் முகாமில் அனைவரும், (182 பேர் ஒரே ஹாலில் தங்கியுள்ளார்கள்) ஏக மனதாகத் தாங்கள் ஒரு நாளும் திரும்பிப் போகப் போவதில்லை என்று அடித்துச் சொல்கிறார்கள். ''இந்த அரசாங்கம் எங்களுக்கு வேலை வாங்கித் தர வேண்டும். நாங்கள் (காஷ்மீர் பண்டிட்கள்) சுதந்திரம் அடைந்ததிலிருந்து, இந்த நாட்டிற்காகத் தியாகம் செய்து வருகிறோம். காஷ்மீரில் பலரும் ஆகஸ்ட் 14 ஆம் தேதி பாகிஸ்தான் சுதந்திர தினத்தைக் கொண்டாடிய போது, நாங்கள் உயிருக்குத் துணிந்து இந்தியக் கொடியைப் பிடித்துக் கொண்டு நடந்தோம். அதற்கு இந்திய அரசாங்கம் எங்களுக்கு என்ன செய்தது?'' என்று கேட்ட இந்த இளைஞர்கள், ''இப்படியே போய்க் கொண்டிருந்தால் நாங்களும் கொடியை விட்டுவிட்டுத் துப்பாக்கியைத் தூக்க வேண்டிய நாள் வந்து விடும்'' என்று வீராவேசமாக முழங்கினார்கள்.

''இப்படி நீங்கள் எல்லோருமே காஷ்மீரை விட்டு ஓடி வந்து விட்டால், காஷ்மீரைத் தீவிரவாதிகளுக்கே விட்டுக் கொடுத்தது போல் ஆகி விடாதா?'' என்று நாம் கேட்டதற்கு, ''எங்கள் உயிரைப் பணயம் வைத்து, நாங்கள் அப் பள்ளத்தாக்குக்குத் திரும்புவதாக இல்லை. தம்மைச் சுற்றிப் பாதுகாப்பு ஒன்றும் இல்லாமல் கவர்னர் கிரீஷ் சக்ஸேனா ஸ்ரீநகர் வீதிகளில் நடந்து காண்பிக்கட்டும். அவரைப் பின்தொடர்ந்து நாங்களும் செல்லத் தயாராக இருக்கிறோம்'' என்றார் சஞ்சய் என்ற இளைஞர்.

''அப்படிப்பட்ட ஒரு அமைதி நிலை காஷ்மீர்ப் பள்ளத்தாக்கில் வருமா?''

''எங்களுக்கு நம்பிக்கையில்லை!''

இதுதான் பலரின் அபிப்பிராயம்.

**— ரமாமணி சுந்தர்**

படங்கள்: **செந்தில் ஆர். கணேஷ்**



தப்பி ஓடறான்... விட மாட்டேன்... பைக் இருக்கு... இதோ, அடிச்சிட்டேன்!
பொது ஜனம்
உன்னை நம்பி வாழ வேண்டி இருக்கு, பாரு...
ஆட்டோ சங்கர்
நிர்வாகச் சீர்கேடு
ஐய்யய்யோ... பணயக் கைதிகள்... ஈராக்கில நம்ம ஆளுங்க மாட்டிக்கிட்டாங்க மாட்டிக்கிட்டாங்க...
பயங்கரம்... பயங்கரம்... ஈராக்கைச் சுற்றி அமெரிக்க முற்றுகை... நம்ம கதி... நம்ம கதி...
சதாம் உசேன்
அப்பாடா! கையெழுத்து போட்டுட்டேன்... ஜனநாயகக் கடமை முடிஞ்சு போச்சு... பாக்கியை நம்ம ஆளுங்க பார்த்துப்பாங்க!
மார்ஷல்... மார்ஷல்...
என் நாற்காலியில நீ எப்படிடா உட்காரலாம்?
ஆய்... ஊய்...



கல்கி

1990 செப்டம்பர் 2
மலர் : 49 இதழ் 5
பிரமோதூத ஆவணி 17



# ஆட்டோ சங்கரும் அரசியல் தலைமையும்!

தி. மு. க. அரசின் சாதனைகளிலெல்லாம் மிகப் பெரிய சாதனையாக ஒன்று நிகழ்ந்திருக்கிறது.

மலிவு விலை மது உற்பத்தி, விநியோகத்தை விட உயர்ந்த சாதனை...

மக்களின் வரிப் பணத்தில் இலவசங்களை அள்ளி வீசுவதை விடப் பெரிய சாதனை...

நாடாளுமன்றத் தேர்தலில் ஒரு தொகுதியில் கூட வெற்றி பெறாத மகத்தான சாதனை...

எதிர்க்கட்சித் தலைவியைப் பலவிதங்களில் துன்புறுத்துவதில் அபார சாதனை...

பத்மநாபா கொலை வழக்கில் சம்பந்தப்பட்டவர்களைக் கோட்டை விட்டுவிட்டு, தொடர்பற்றவர்களைச் சிறையில் தள்ளி, பிறகு அவர்களும் ஜாமீனில் வெளியேற வழிவகுத்த பிரமிப்பான சாதனை...

இவையெல்லாவற்றையும் தூக்கி அடிப்பதுபோல் ஓர் அரிய பெரிய சாதனை நிகழ்ந்திருக்கிறது.

ஆட்டோ சங்கர் மத்திய சிறைச்சாலையிலிருந்து தப்பி ஓட வசதி செய்து தந்த சாதனைதான் அது!

"அடடா! எப்பேர்ப்பட்ட சாதனை!" என்று தமிழக மக்கள் பெருமையில் பூரித்துப் புளகாங்கிதமடைந்திருக்கிறார்கள்!

ஆட்டோ சங்கர் என்ன இலேசுப்பட்டவரா? அடேயப்பா! எத்தனை கொலைகளை நடத்திய மாவீரர் அவர்! எத்தனை பெண்களைக் கெடுத்த புனிதர்! எத்தனை எத்தனை பெரிய மனிதர்களின் காம இச்சைகளைப் பூர்த்தி செய்யப் பெண்களைப் பலியிடத் தயங்காத உற்ற நண்பர்! அப்பேர்ப்பட்டவரை உரிய மரியாதையுடன் சிறையிலிருந்து விடுவித்து வழியனுப்பி வைப்பதென்றால் சாமானிய காரியமா!

மத்திய சிறைச்சாலைதான் என்ன சாதாரணக் கட்டடமா! எத்தனை கனமான சுவர்கள்! எத்தனை உயர சுற்றுச் சுவர்! எத்தனை கனமான இரும்புக் கதவுகள்! எத்தனை காவல்! எவ்வளவு பந்தோபஸ்து! அத்தனையையும் மீறி ஒருவரைத் தப்பிக்க வைப்பது என்றால் எவ்வளவு கஷ்டம்!

கொலைகாரர்கள், கொள்ளைக்காரர்கள், பிக்பாக்கெட் பேர்வழிகள் என்று அங்கே எத்தனையோ கைதிகள்! அத்தனை பேருமா தப்பிக்க முடிந்தது? ஆட்டோ சங்கரும் அவரது கூட்டாளிகள் இருவரும் மட்டும் தப்பினால் ரொம்பத்தான் தங்கள் மீது கேஸ் பலப்பட்டுப் போகுமே என்பதால் சிறை அதிகாரிகள் மேலும் இருவரையும் தப்பிக்க விட்டது எவ்வளவு புத்திசாலித்தனம்!

இதற்கெல்லாம் எவ்வளவு திட்டமிடல் வேண்டும்! எத்தனை தரம் ஒத்திகை பார்த்திருக்க வேண்டும்! எத்தனை லட்சம் கைமாறியிருக்க வேண்டும்! நினைக்க நினைக்க வியப்பு மேலிட, திகைத்துத் திக்குமுக்காடிப் போகிறோம்!

போலீஸ் அதிகாரிகள் பலரும் அரசியல் பெரும்புள்ளிகள் பலரும் ஆட்டோ சங்கருடன் நட்புரிமை பாராட்டிக் குலாவியவர்கள் என்பது தெரிந்திருந்தும், இப்போது சங்கர் தப்புவதால் இவர்கள் மீது சந்தேகங்கள் வலுப்படும் என்பது புரிந்திருந்தும் இப்படித் திட்டமிட்டு அந்தக் கொலைகாரனைத் தப்பிக்க விடுவதெனில், அதற்குச் சம்பந்தப்பட்டவர்களுக்கு எத்தனை நெஞ்சுறுதி வேண்டும்! நம்மை மலைக்க வைக்கின்ற இந்த நெஞ்சுறுதி அவர்களுக்கு எப்படி வந்தது?

தவறுகள் பல செய்வதுடன், அந்தத் தவறுகளைச் செய்யக் காவல் துறையையே பயன்படுத்திக் கொள்கிற சாமர்த்தியம் மிக்க அரசியல் தலைமை கொடுத்த துணிவுதான் அது! அரசியலில் பெருந்தன்மையுடன் மன்னிக்கப்படுகிற லஞ்ச ஊழல்தான் சிறை அதிகாரிகளுக்கும் வழிகாட்டியிருக்கிறது!

ஆட்டோ சங்கர் மீண்டும் பிடிபடலாம், அல்லது நிரந்தரமாகத் தப்பியும் விடலாம். எவ்வாறானாலும், இன்றைய அவரது மகத்தான வெற்றிக்கு வழி வகுத்த அதிகாரிகளின் ராஜதந்திரம், வழிகாட்டிய அரசியல் சாணக்கியம் ஆகியவற்றுக்கு நமது சிரம் தாழ்ந்த வணக்கங்கள்!

வாழ்க லஞ்ச ஊழல்! வளர்க அதிகார துஷ்பிரயோகம்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.




(ஆல்பர்ட் தியேட்டரில் படம் பார்த்துவிட்டு வந்த சில ரசிகர்களின் விமர்சனங்களுக்குப் பட இயக்குனர் பி. வாசு பதிலளிக்கிறார்...)

**திருமதி சாந்தா (குடும்பத் தலைவி), தண்டையார் பேட்டை:** எந்த வேலையிலும் உருப்படியாக உட்காராமல், ஊரைச் சுற்றிக் கொண்டிருக்கின்ற வாத்தியாரின் (நேர்மையான) மகன் அந்த ஊரின் பெரிய 'ரவுடி' பாஷாவின் கூட்டத்தை ஒழித்து ஊரில் அமைதி ஏற்படுத்துகிற வேலையில் இறங்குகிறார். கதை என்னவோ விறுவிறுப்பாகத்தான் போகுது. இதுபோன்று வன்முறைக் காட்சிகளைக் கொண்டு ரொம்பப் படம் வந்துட்டதால கொஞ்சம் அலுப்புத் தட்டுது. கொஞ்சம் குறைச்சு இருக்கலாம். ஆரம்பத்தில் பாத்ரூமில் நடக்கிற தமாஷ் காட்சிகளும் கவுண்டமணி அடுத்த வீட்டுப் பொம்பளைங்களையே பார்த்துக்கிட்டு இருப்பதும் காமெடிக்காக வெச்சிருக்காங்கன்னாலும் கொஞ்சம் விரசமாத்தான் இருக்கு! சினிமாக்காரங்களுக்கு இதை விட்டா வேற தெரியாதா?

**பி. வாசு (பட டைரக்டர்):** இந்தக் கதையில், 'ரவுடிக் கும்பலை வளர விடாதீங்க; பொதுமக்கள் அவங்களைப் பார்த்துப் பயந்து ஒதுங்குவதாலதான் ரவுடிங்க வளர்ந்துக்கிட்டே வர்றாங்க; அதனால பொதுமக்கள் ரவுடிக் கும்பலை ஒழிக்க உதவணும்'னு சொல்றேன். அதற்கு ரவுடிகளின் குரூரத்தையும் நான் காட்டத்தானே வேண்டும். பாத்ரூம் தமாஷ் எல்லாம் ஆடியன்சுக்குக் கொஞ்சம் ரிலீப் தரத்தான் வைத்தோமே தவிர, ஆபாசத்துக்காக அல்ல.



* டைரக்டர் பி. வாசு

# வேலை கிடைச்சிடுச்சு



**நரேந்திரன் (இஞ்சினியர், மெட்ரோ வாட்டர், சென்னை:** சத்யராஜின் நடிப்பில் நிறையவே எம். ஜி. ஆர். பாணி தெரியுது. சண்டைக் காட்சிகளில் பிரமாதமாகச் செய்திருக்கிறார். அவருக்கே உரிய ஸ்டைலான பேச்சும் இயல்பான நடிப்பும் நன்றாக இருக்கிறது. சண்டைக் காட்சிகளில் ஹீரோவுக்குச் சரிசமமாக வில்லனையும் இயக்கியிருப்பதும் வில்லன் கோஷ்டிகள் எல்லாம் வெள்ளை — வேஷ்டி, வெள்ளைச் சட்டையில் 'பளிச்' சென்று இருப்பதுவும் வித்தியாசமாக இருக்கிறது. கடைசியில் சத்யராஜ் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் டிரெஸ் வாங்குவதற்காகப் போகிறார். கடையை விட்டு வெளியே வரும்போது ஹனிபா டெக்ஸ்டைல்ஸ் (சென்னை) போர்டு காட்டப்படுகிறது. அடுத்த ஷாட்டில் உடனே டிரெஸ் பார்சலுடன் வீட்டு வாசலில் (குற்றாலம்) ஆட்டோவில் வந்து இறங்குவதாகக் காட்டுகிறார்கள். இந்த இடத்தில் சென்னையிலிருந்து குற்றாலத்துக்கு உடனே ஆட்டோவில் எப்படி வர முடியும்?

**பி. வாசு:** சென்னைவாசிகளுக்கு வேண்டுமானால் இப்படி நினைக்கத் தோன்றும். மற்ற ரசிகர்களுக்கு ஒன்றும் பிரச்னை இருக்காது.

***அருண் கண்ணன் (கல்லூரி மாணவர்):*** விஜயகுமார் ஸ்மிதா ஆகியோரின் ஆர்ப்பாட்டமில்லாத இயல்பான நடிப்பு நன்றாயிருந்தாலும், கௌதமிக்குக் கண்ணாடி போட்டு விட்டிருப்பது எடுபடவில்லை. சத்யராஜிடம் உள்ளூர்ப் பெண்களைத் தரம் வாரியாகப் பிரித்துக் கணக்கிட்டுச் சொல்கின்ற இடமும் சத்யராஜ் ஆஸ்பத்திரியில் இண்டர்வியூ பண்ணுகின்ற இடமும் ஒரே கலகலப்பு! அம்சலேகாவின் இசை சொல்லும்படியாக இல்லை. பாடல்களும் சரி, பாடல் காட்சிகளும் சரி, ஏதோ சேர்க்க வேண்டும் என்பதற்காகச் சேர்த்திருப்பது போலத் தெரிகிறது. போரடிக்காமல் படம் விறுவிறுப்பாகப் போவதற்கு எடிட்டிங்தான் முக்கிய காரணம்.

**பி. வாசு:** கௌதமி கேரக்டர், ஒரு குறும்புத்தனமான பெண். உங்களைப் பார்த்தால் எங்கோ பார்ப்பது போல் பார்ப்பாள். இப்படிப்பட்ட காரெக்டருக்குக் கண்ணாடி போட்டால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது. இந்தப் படத்தைப் பொறுத்தவரை நான் பாடல்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை. ஒரு ரிலாக்சேஷனுக்காகத்தான் பாடல் காட்சிகள்.

தொகுப்பு: ®எஸ். பாலு

ரசிகர்கள் படங்கள்: **ரமணன்**



## சிரிக்க வையுங்கள்; சிங்கப்பூர் செல்லுங்கள்!

கல்கி பொன்விழாப் பரிசுத் திட்டத்தின் கீழ் துணுக்கு, ஜோக் பிரியர்களுக்கு இதோ ஒரு போட்டி:

அடுத்த வாரம் முதல் கல்கியில் ஓர் அரைப் பக்கக் கூப்பன் இடம் பெறும். அதில் பால்பாயிண்ட் பேனாவால் ஒரே ஓர் அனுபவத் துணுக்கு; அல்லது ஒரே ஒரு கற்பனை ஜோக் எழுதி அனுப்புங்கள்.

துணுக்கோ, ஜோக்கோ, ஒரிஜினலாக இருக்க வேண்டும்; ஏற்கெனவே பிரசுரமான துணுக்கு, ஜோக் என்று நிரூபணமானால் போட்டியிலிருந்து அந்தத் துணுக்கு அல்லது ஜோக் நீக்கப்படும். கூப்பனில் மட்டுமே, கூப்பனில் உள்ளடங்குவது போல் சுருக்கமாக எழுத வேண்டும். கற்பனை ஜோக் மட்டுமின்றி நேரடி அனுபவத் துணுக்கும் கூட நிச்சயம் சிரிப்பை வரவழைக்க வேண்டும்.

பிரசுரமாகும் ஒவ்வொரு ஜோக் அல்லது துணுக்கும் பொன் விழாப் பரிசுத் திட்டத்தில் ரூ. 25 சன்மானம் பெறும். எனவே, நீங்கள் 25 கூப்பன் அனுப்பி ஒன்று பிரசுரமானால் கூடச் செலவான தொகை திரும்பக் கிடைத்துவிடும்!

தவிர அடுத்த ஆகஸ்டு இறுதிக்குள் யாருடைய துணுக்குகள் அல்லது ஜோக்குகள் மிக அதிகமாகப் பிரசுரமாகிறதோ அவர் கல்கி பொன் விழா ஆண்டில் தம்பதி சமேதராகச் சிங்கப்பூர் சென்று ஜாலியாகச் சுற்றிப் பார்த்து வரலாம்! கல்யாணமாகாதவர்கள் தங்கள் விருப்பப்படி யாரேனும் ஒரு நண்பரை, அல்லது உறவினரை உடன் அழைத்துப் போகலாம்.

சிங்கப்பூர் பயணம் முடிந்து திரும்பி வந்ததும் அவர்களுடைய சிங்கப்பூர் பயண அனுபவங்கள் கல்கியில் பிரசுரமாகும்.

எங்கே, துணுக்குகளையும் ஜோக்குகளையும் நமது காரியாலயத்தில் குவியச் செய்யுங்கள் பார்க்கலாம்!

உறை மீது, "சிரிக்கச் செய்யுங்கள்; சிங்கப்பூர் செல்லுங்கள்" என்று தயவு செய்து குறிப்பிடவும்.

— ஆசிரியர்

# மஹாலயம் (அல்லது மஹாளயம்)



பெரிய இருப்பிடம், கல்யாணாதி சுபங்களுக்கு இருப்பிடம் மஹான்களுக்கு இருப்பிடம் என பல பொருள்கள் உண்டு. அதாவது . மஹான்களான பித்ருக்கள் பூமியில் வந்து 16 நாட்கள் தங்கி, புத்ரன் முதலியவர்களுக்கு சுபத்தைச் செய்யும் காலம் என்று பொருள். ஸூர்யன் கன்யா ராசியில் புகுந்தபோது, ஆஷாடம் முதலான 5 ஆவது அபர பக்ஷத்தில் பித்ருக்கள் பூமிக்குச் செல்ல ஏவப்படுகின்றார்கள். அச்சமயம் நமது பெற்றோர், அவர்களது பெற்றோர்களுடன் கூடி நம்மை நாடி வருகின்றனர். அச்சமயம் மஹாளய அன்னச்ராத்தமாகச் செய்வது உத்தமம். இந்த 16 நாட்களில் செய்ய முடியாதவர் அன்ன ச்ராத்தமானால் அடுத்த பக்ஷத்திலும் செய்யலாம்.

தீபாவளி அமாவாஸ்யைவரை பித்ருக்கள் அன்ன ச்ராத்தத்தை எதிர்பார்க்கிறார்களாம். விதிப்படி ஹோமம் செய்து அன்னம் போட முடியாவிடில் அன்னத்திற்கு ப்ரதிநிதியாக வெள்ளி நாணயத்தை அளித்து (அதாவது ப்ராம்மணர்களை வரித்து, ஆஸனாதிகளையும் தக்ஷிணையும் அளித்து) தர்ப்பணம் செய்வதாம். அதே ஹிரண்ய ச்ராத்தம் எனப்படும். அங்ஙனம் பிரதி தினம் செய்ய முடியாதவர் பித்ரு, மாத்ரு திதி அல்லது மஹாபரணீ, வ்யதீபாதம், மத்யாஷ்டமீ முதலிய புண்யகாலத்தில் ஹிரண்யம் செய்வது பழக்கம். ச்ராத்த ப்ராம்மணர்களைப் போல் அல்லாமல், ஸாதாரண ஸமாராதனை போல் அன்று அன்னமிடுவது வழக்கம். அதுவும் தற்சமயம் பலவிடங்களில் நடப்பதில்லை. தக்ஷிணை அளித்து அனுப்புவதுடன் நிற்கின்றது. வீணான செலவுகளைக் குறைத்துக் கொண்டு மஹாளயத்தை அன்ன ச்ராத்தமாகச் செய்வதே உத்தமம். ஹிரண்யமாகவாவது செய்து அன்னமிட வேண்டும். 16 நாட்களிலும் தர்ப்பணத்தையேனும் விடாமல் செய்து ஒரு நாளாவது ஹிரண்ய ச்ராத்தம் செய்ய வேண்டும். அதனால் ஸகலவிதமான நன்மையும் பெறவேண்டும்.



# மஹாளயம் செய்வதால் உண்டாகும் பலன்



1. ப்ரதமையில் ச்ராத்தம் செய்தால் தனலாபமுண்டாகும்.
2. த்விதீயை ச்ராத்தம் ஸந்ததியைத் தரும்.
3. த்ரீதீயா ச்ரார்த்தம் நல்ல வரன் அல்லது நல்ல மருமகனைத் தரும். அல்லது கோரிய வரத்தைத் தரும்.
4. சதுர்த்தி சராத்தம் நமது பகைவர்களை அகற்றும்.
5. பஞ்சமீ ஸம்பத்தை உண்டாக்கும்.
6. ஷஷ்டி கர்த்தாவைப் பிறர் பூஜிக்கும்படிச் செய்யும்.
7. ஸப்தமீ பரலோகத்தில் ஒரு தேவ கோஷ்டிக்குத் தலைவனாகச் செய்யும்.
8. அஷ்டமீ உயர்ந்த புத்தியை அளிக்கும்
9. நவமீ நல்ல மனைவியைத் தரும். துஷ்ட மனைவியை நல்லவளாகச் செய்யும். அடுத்த பிறவியிலும் நல்ல மனைவியைத் தரும்.
10. தசமீ நம் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும்.
11. ஏகாதசீ ஸகல வேத வித்யைகளையும் தரும்.
12. த்வாதசீ ஸ்வர்ணத்தைத் தரும்.
13. த்ரயோதசீ ஸந்ததி, மேதை, பசு, புஷ்டி, ஸம்ருத்தி நீண்ட ஆயுள் முதலியவைகளைத் தரும்.
14. வஸ்த்ரம் அல்லது அக்னி (தற்காலத்தில் தோன்றிய ரயில், மோட்டார் போன்ற விபத்து) இவைகளால் இறந்தவர்களுக்குச் சதுர்த்தசியில்தான் மஹாளய ச்ராத்தம்செய்ய வேண்டும். அதே அவர்களுக்கு இன்பத்தைத் தரும்.
15. அமாவாஸ்யை ச்ராத்தம் ஸகல இஷ்டங்களையுமளிக்கும்.
16. அடுத்த ப்ரதமை தர்ப்பணம் முன் செய்தவைகளில் உள்ள குறைகளை நீக்கிப் பூர்ணமாகச் செய்யும்.

ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம்.

# அதிர்ஷ்ட தேவதை

21

பி.வி.ஆர்.

அன்று காலை ரமணி தாத்தாவின் அறையினுள் பிரவேசித்தான்.

தாத்தா ஒரு நாற்காலியில் அமர்ந்து, கண்ணாடியின் உதவி இல்லாமலே முகத்தைப் பழைய ஜெர்மன் ரேஸரால் மழித்துக் கொண்டிருந்தார். அவர் வீட்டிலேயே அடைந்து கிடப்பவர். யாரையும் பார்க்க எப்போதுமே வெளியே செல்லாதவர். இப்படி இருக்கையில் எதற்கு இந்தத் தினசரி கலியாணம்? ரமணி ஒரு தடவை கேட்ட போது, 'எதை நிறுத்தினாலும் பழக்கத்தை நிறுத்தப்படாது. முகத்திலே தாடி அரும்பு விட்டாலே உடம்புக்கு ஏதோ வந்துட்டதா மனசு கலங்க ஆரம்பிச்சுடும். எப்போதும் ஃப்ரெஷ்ஷா இருக்கணும்' என்றார்.

''என்னடா, இன்னிக்கு இவ்வளவு லேட்டு?'' என்ற தாத்தா, ''அந்த மாலுப் பொண்ணுவைத் தூக்கத்திலே நிறைய நேரம் ரசிக்கணும்னு தூங்கிட்டியா?'' என்றார்.

''அதெல்லாம் ஒண்ணும் இல்லே தாத்தா'' என்று சொன்ன ரமணி உட்கார்ந்தான்.

''பார்க்க லட்சணமா இருக்காடா. உன் அம்மா அப்பாகிட்டச் சொல்லிட்டேன், சீக்கிரம் முகூர்த்தத்தை வைச்சுக்கணும்னு. மாலுவோட அப்பா நாளைக்கே ரெடின்னார்.''

''நான் இன்னும் ரெடி இல்லை தாத்தா!''

''ஏண்டா, ஏன்...?''

''உங்களுக்கே தெரியும்

''என்ன தெரியும்?''

''இந்த வீட்லே இடம் இல்லேன்னு...''

''நான் இடம் பண்ண ஒரு திட்டம் போட்டிருக்கேண்டா ரமணி... அப்புறமாச் சொல்றேன்.''

''இன்னும் கொஞ்ச நாள் போகட்டும் தாத்தா...

''நான் உசிரோட இருக்கறப்ப உன் கலியாணம் நடக்கணும். நீங்க ரெண்டு பேரும் ஊஞ்சல் ஆடறப்ப நான் பாடணும்!'' என்றார் தாத்தா.

''என்ன தாத்தா இப்படியெல்லாம் பேசற ஆசை வைச்சிருக்கீங்க?''

''இதப் பாரு ரமணி! எனக்கு என்னதான் உடம்பு திடமா இருந்தாலும், இருமல் வர்றப்ப மார்பு ரொம்ப வலிக்கிறது. எப்பப் பெரிசா ஒரு இருமல் வரும், அதிலே நான் எப்பப் புறப்படுவேன்னு தெரியலே... ஆனா எனக்கு ஒரு ஆசை. உன் கலியாணம் என் கண் முன்னாடி நடக்கணும்.''

ரமணியால் பதில் சொல்ல முடியவில்லை.

''இன்னொரு ஆசையும் இருக்குடா ரமணி.''

''என்ன தாத்தா, எங்களுக்குப் பிறக்கப் போற குழந்தையின் ஆண்டு நிறைவையும் பார்க்கணுமா?''

''குறும்புப் பயலே, எங்கிட்டயே உன் வாலை ஆட்டறியா? இந்த வீடு பழைய வீடு. இதை இடிச்சுட்டு, நாம ஒரு இருபது ஃப்ளாட் கட்டணும். இதுதாண்டா நான் வைச்சுட்டிருக்கிற திட்டம்.''

''தாத்தா... நீங்களா இப்படிப் பேசறீங்க?'' ரமணி அயர்ந்து போனான்.

''ஆமாம்டா... நான்தான் பேசறேன். நான் ஒரு முடிவுக்கு வந்துட்டேன். என்னுடைய இந்த ஆசையை உன்னால்தான் திட்டம் போட்டுச் செய்ய முடியும்.''

''இருபதுன்னா?''

''நானே என்ஜினியர்தான். ஆனா இப்புகல்தான் காலத்து என்ஜினியர். ஒரு ஆர்க்கிடெக்டைப் பாரு. பிளான் போடச் சொல்லு. அப்புறம் எம்.எம்.டி.ஏ. கார்ப்பரேஷனெல்லாம் இருக்கு!''

''தாத்தா, நாம முப்பது ஃப்ளாட் ரொம்ப ஈஸியாக் கட்டலாம்.''

''சரி, இப்ப உன் காதிலே போட்டு வைச்சாச்சு. ஆனா மத்தவா யார் காதிலேயும் விழப்படாது.''

''சரி தாத்தா.''

''நான் என்னோட மூணு பிள்ளைகளுக்கு மூணு ஃப்ளாட் கொடுக்கப் போறேன்.

எனக்குன்னு தனியா ஒரு ஃப்ளாட்.. அது எனக்கு அப்புறம் உனக்கு வரும். மத்ததையெல்லாம் வித்துப் பணமாக்குவோம். என்ன சொல்றே?''

''எப்படித்தாத்தா, திடீர்னு இப்படி ஒரு ஐடியா தோணித்து உங்களுக்கு?''

''ரொம்ப நாளா இருக்குடா. ஆனா யார்ட்டே இதைச் சொல்றது? உன் அப்பன் ஒரு சோம்பேறி. பெரியப்பாவுக்கு ஹார்ட் அட்டாக் வந்தாச்சு. அவனோட பிள்ளை அமெரிக்காவிலே இருக்கான். உன் சித்தப்பனைப் பத்திச் சொல்ல வேண்டாம். ரெண்டுங்கெட்டான். சாமியார் பின்னாடி போற ஜென்மம். இப்ப நம்ப அபிராமபுரத்திலே கிரௌண்டு நாலு லட்சம் அஞ்சு லட்சம்னு போறது.''

''எல்லாம் தெரிஞ்சு வைச்சுட்டிருக்கீங்க, தாத்தா!'' என்ற ரமணி, ''எனக்கு மூணு அத்தைகள் இருக்கா. மறந்துடாதீங்க!'' என்றான்.

''நான் கண்ணை மூடிட்டா சட்டப்படி எல்லாரும் பங்கு கேட்டுக்கிட்டு வருவா. நான் உசிரோட இருக்கறப்பவே செஞ்சு முடிச்சுட்டா பிரச்னை இருக்காது. என் மூணு பெண்களுக்கும் தலா அரை லட்சம். கொடுத்துடறேன். லாபம்தான் எக்கச்சக்கமாக் கிடைக்குமே?''

''தாத்தா!''

''என்னடா?''

''கட்டி முடிக்கிற பொறுப்பையும் எங்கிட்டேயே விட்டுடறீங்களா?''

''ஆமாம்... உன்னால் முடியும். ஆனா ரொம்பக் கவனமா இருக்கணும்.''

''சரி தாத்தா!''

''ஆமாம், நாலஞ்சு லட்சம் மூலதனமாப் போட வேண்டியிருக்குமே. என்ன செய்வே?''

''நம்ப ரங்கன் இருக்கான் தாத்தா!''

''அவனோட லாட்டரிப் பணத்திலே கை வைக்கப் போறியா? கொன்னுப்புடுவேன்!''

''என்ன தாத்தா, நீங்க! நான் ரங்கனைப் போய் ஏமாத்துவேனா? நான் கடன் கேட்டா அவன் இல்லைன்னு சொல்லமாட்டான்.''

''வட்டிக்குப் பதிலா அவனுக்கும் ஒரு ஃப்ளாட்டை வேணும்னா கொடுத்துடு... ஆமாம். அவன் உடம்பு எப்படியிருக்கு இப்ப?''

''பழைய ரங்கனாயிட்டான். ஆனா வியாதி உள்ளுக்குள்ளே இருந்து மிரட்டறது.''

''என்ன வியாதின்னு திருமலை சொன்னானா?''





''என் மனைவிக்கு 'ஷாக்' கொடுக்க விரும்பி, நான் சின்ன வீடு செட்டப் பண்ணியிருக்கிறதா ஒரு பொய் சொன்னேன், பாருங்க...''

''அழுது புலம்பி ஆர்ப்பாட்டம் பண்ணியிருப்பாங்களே!''

''ஊஹூம்... தாராளமா செய்யுங்க... அவளாவது வந்து உங்களைக் குடிகூதாட்டத்திலிருந்து மீட்க முடியுதான்னு பார்க்கலாம்னுட்டா!''

— மணியன் தர்மலிங்கம்.

''எம்ப்பிஸிமான்னு வியாதியோட பேராம். பத்துப் பதினஞ்சு லட்சம் பேர்ல ஒருத்தனுக்கு வர்ற வியாதியாம்!''

''அவனுக்கு லாட்டரியிலே பிரைஸ் வந்ததே. அப்ப டிக்கட்டு வாங்கினவங்க அம்பது லட்சமாவது இருக்காதா?''

''இருக்கும் தாத்தா!''

''இதுதான் தெய்வத்தோட திருவிளையாடல். அம்பது லட்சத்திலே இவன் ஒருத்தனுக்குப் பரிசு விழுந்த மாதிரி, பத்துப் பதினஞ்சு லட்சத்தில இவனுக்கு இந்த வியாதியும் வந்திருக்கு. ஹங், பேர் என்ன சொன்னே?''

''எம்ப்பிஸிமான்னு...லங்ஸ்லே கோளாறு. சுருண்டு கிடக்கிற லங்ஸைப் பாயா விரிச்சா, அது ஒரு டென்னிஸ் கோர்ட் அளவுக்குப் பரவுமாம். ஆனா ரங்கனோட நுரையீரல் ரொம்பக் குறுகி, மடிப்புக்களெல்லாம் சுருங்கிக் கிடக்கிறதாம். இதனால நுரையீரல் சக்தியே இல்லாமத் தவிக்கிறதாம்.''

''அப்படியா?''

''இந்தக் கோளாறு காரணமா பிராண வாயு உள்ளே எவ்வளவு போனாலும் கரியமில வாயு முழுதும் வெளியே வர முடியறதில்லே.''

''அடப் பாவமே!''

''சின்ன வயசில ரங்கனுக்கு ஆஸ்த்மா இருந்திருக்கு. காற்றுக் குழாய் சின்னதாப் போயிருக்கு.''

''எனக்கு அந்த வியாதி இல்லியே ரமணி?''

''உங்க வியாதிக்கும் ரங்கன் வியாதிக்கும் சம்பந்தமே இல்லே, தாத்தா!''

''அவனை என்ன செய்யப் போறே?''

''தெரியலே தாத்தா. ஆனா ரொம்ப நாள் ரங்கன் இருக்க மாட்டான். என்னோட ஒரு ஆசை, அவன் இருக்கிற வரை, பணத்தை அவன் சுகமா அனுபவிக்கணுங்கறதுதான்.''

''அவன்கிட்டயா கடன் வாங்கப் போறே?''

''ஆமாம்.''

''நீ திருப்பிக் கொடுக்கறதுக்குள்ளே அவன் போய்ச் சேர்ந்துட்டா?''

''அவனுக்கு அப்புறம், அவன் பணத்திலே யாருக்கு உரிமை இருக்கோ, அவங்ககிட்ட கொடுத்துடுவேன்.''

''சரி, நீ வேலையை ஆரம்பி!''

''இப்ப நீங்க சொன்ன வார்த்தையை நம்பி நான் முழு மூச்சா வேலையில் இறங்கலாமா, தாத்தா?''

''படவா, என்னை என்ன கற்பூரம் ஏத்திச் சத்தியம் பண்ணச் சொல்றியா?''

''அதுக்கில்லே தாத்தா, நான் என் வேலையிலிருந்து ராஜினாமா செய்யணும்.''

''இப்போதைக்கு லீவு எடுடா. அஸ்தி வாரம் போட ஆரம்பிக்கறப்ப ராஜினாமா பத்தி யோசனை செய்யலாம்!''

**மா**லு சிரித்துக் கொண்டே அவனருகில் வந்தாள்.

''குட்மார்னிங்!''

''உட்கார் மாலு!''

''உங்க தாத்தாவை எனக்கு ரொம்பப் பிடிச்சுப் போயிடுத்து ரமணி.''

''ரொம்பச் சந்தோஷம். நான் இப்ப ரொம்பத் தீவிரமா யோசிச்சுட்டிருக்கேன் நீ டிஸ்டர்ப் பண்ணாதே!''

''கலியாண மண்டபம் பார்த்தாச்சு.''

ரமணிக்குக் கோபம் வந்தது.

''ஆக்கப் பொறுத்தவனுக்கு ஆறப் பொறுக்கலையாம்... ஏன் நீ கொஞ்சம் வெயிட் பண்ணப்படாது?''

''கொஞ்சம்னா...?''

''அஞ்சாறு மாசம்... இங்கே நீ உசிரை எடுக்கறே... அங்கே ரங்கன் உனக்காக வக்காலத்து வாங்கிட்டு கால்லே விழுந்து அழறான்... இதெல்லாம் போராதுன்னு தாத்தா வேறே அவசரப்படுத்தறார்!''

''அப்படியும் உங்க மண்டை மரமண்டையா இருக்கு!''

''ஓ.கே. மாலு, நாம கூடிய சீக்கிரம் கலியாணம் பண்ணிக்கலாம். ஆனா ஒரு கண்டிஷன்!''

''தெரியும். அவ்வளவு பெரிய வீட்ல நம்ப ரெண்டு பேருக்கு இடமில்லை. இதுதானே?''

''இன்னும் கொஞ்ச நாள்ளே அந்த வீடே இருக்காது மாலு.''

''வாட் டு யூ மீன், ரமணி?''

''அங்கே கிரௌண்டு நிலத்திலே முப்பது ஃப்ளாட் கட்டறதா முடிவாயிடுத்து, மாலு. இப்ப நாங்களே வாடகைக்கு வீடு பார்த்துட்டிருக்கோம். அப்பா, பெரியப்பா, சித்தப்பா எல்லாருக்கும் ஒரே ஆத்திரம். ஆனா தாத்தாவை அவங்களாலே எதிர்த்துக்கவும் முடியலே... எல்லாரும் எங்கிட்டக் கத்தறா... நான்தான் இந்த ஐடியாவைத் தாத்தாவுக்குக்

கொடுத்தேனாம்!''

''உண்மையிலே நீங்க கொடுக்கலியே, ரமணி?''

''மாலு, நீயுமா சந்தேகப்படறே?''

''அதுக்குக் காரணம், தாத்தா கண்ணை மூடினப்புறம் அந்த கிரௌண்ட் நிலத்தில நிறைய ஃப்ளாட் கட்டி, பணம் சம்பாதிக்கணும்னு நீங்க மனக்கோட்டை கட்டியிருக்கீங்க!''

''நான் இல்லேன்னு சொல்லலே மாலு. ஆனா, இதே எண்ணம் தோணுறத்து ரெண்டு வயசுக்காரருக்கு திமிர்னு வந்திட்டுது. நான் என்ன செய்வேன்!''

''எல்லாப் பொறுப்பும் உங்க தலையிலே தானே?''

''ஆமாம். அதான் வெயிட் பண்ணுங்கறேன்.''

''உங்களுக்கு ஆத்மார்த்தமா உதவி செய்ய யார் இருக்கா, ரமணி, யார் இருக்கா, சொல்லுங்க?''

''ஏன் இப்படிக் கேட்கிறே மாலு.''

''ஏன்னா, நீங்க மத்தவங்களுக்கு உதவி செய்துதான் பழக்கப்பட்டிருக்கீங்க... நீங்க யார் உதவியையும் நாடிப் போனதில்லே.''

''நீ என்ன சொல்ல வர்றே, மாலு?''

''நீங்க கட்டட வேலைகளைப் பாருங்க... நான் கணக்குகளைக் கவனிக்கிறேன்... மொத்தம் எத்தனை ஃப்ளாட்?''

''முப்பது.''

''அதிலே எத்தனை விக்கறதா உத்தேசம்?''

''இருபத்தஞ்சு.

''ஒவ்வொண்ணும் எத்தனை சதுர அடி...?''

''இன்னும் தீர்மானம் செய்யலே. ஆர்க்கிடெக்ட்தான் சொல்லணும். ஆனா ஆயிரம்னு வைச்சுக்கலாம்.''

''சதுர அடி நானூறுன்னா வாங்கறவன் நாலு லட்சம் தருவான். இருபத்தஞ்சு பேர். நூறு லட்சம். ஒரு கோடி. இதிலே நீங்க முப்பது கட்டப் போறீங்க. சதுர அடிக்கு இருநூறுன்னு வைச்சுக்கிட்டாக் கூட முப்பதாயிரம் சதுர அடிக்கு அறுபது லட்சம் ஆகும். இதைத் தவிர, எம்.எம்.டி.ஏ. கார்ப்பரேஷன், காம்பவுண்டு சுவர்னு பல வகைகளிலே செலவாகும். நிர்வாகச் செலவு வேறே இருக்கு. மொத்தம் இருபது லட்சம்னு வைச்சுக்குங்க. பாக்கி எவ்வளவு? இருபது லட்சம். இது லாபம்!''

''மின்சார வேகத்திலே நீ கணக்குப் போட்டுட்டே மாலு! ஆனா மூலதனமா அஞ்சாறு லட்சமாவது தேவைப்படும். ரங்கன்கிட்டேர்ந்து கடன் வாங்கலாம்னு மொதல்ல யோசிச்சேன்... ஆனா அவன்கிட்ட கேட்கறது தப்புன்னு இப்பப் படறது.''

''ஏன், என்ன தப்பு? வட்டி கொடுங்க...''

''வட்டிக்குப் பதிலா ஒரு வீடே கொடுத்துடலாம்!''

''அதுதான் கூடாது ரமணி. பணமா வாங்கினா வட்டியும் பணமாகத்தான் கொடுக்கணும். இன்னொரு ஹெல்ப்பும் கிடைக்கும்...''

''என்ன அது?''

''என் பெரிய மாமா போன மாசம் ரிடையரானார், என்ஜினியர். அவரை மேற்பார்வைக்கு வைச்சுப்போம். செஞ்ச வேலைக்கு இவ்வளவு ஊதியம்னு காண்ட்ராக்டர்களை ஏற்பாடு செய்வோம்!''

''பரவாயில்லையே மாலு. ரொம்பத் தெரிஞ்சு வைச்சுட்டிருக்கே!''

''என் குடும்பத்திலே பாதிப் பேர் பெரிய காண்ட்ராக்டர்கள், ரமணி!''

''இப்ப இந்தத் திட்டத்தைக் கொஞ்சம் மறந்துட்டு, நம்ப ரங்கனைப் பத்தி நினைக்கணும். இப்ப அவன் உடம்பு பரவாயில்லை. மொதல்ல அவனுக்கு தனத்துக்கிட்டேர்ந்து விடுதலை வாங்கிக் கொடுக்க வழி செய்யணும்!''

''அதான் வடிவேலுவை நீங்க பார்த்தாச்சே!''

''மறுபடியும் அவனையும் தனத்தையும் நான் சந்திக்கணும், மாலு. கோர்ட் கேஸ்னு போனா எல்லாருக்கும் தலைவலிதான். மயில்சாமி, தனம். ரெண்டு பேருக்கும் வாய்க்கரிசி போட்டுத்தான் காரியத்தைச் சாதிக்கக்கணும்.''

''இதிலேயும் நான் ஹெல்ப் பண்ணரெடி!''

''தேவை இல்லை!'' என்றான் ரமணி.

மாலு சிரித்துக் கொண்டே எழுந்தாள்.

(தொடரும்)

கணவன்: ரொம்ப நாளாச்சு... ஒரு பாட்டுப் பாடேன்?

மனைவி: என்னங்க... ஆச்சர்யமாக் கேட்டுட்டீங்க?

கணவன்: மனம் விட்டு அழணும் போல இருக்கு. அதான்!

— ஆர். ரத்னசாமி.





* நேரடியாகவே சென்று பிரச்னைகளைக் கேட்டறிகிறார்...

# அரசியல் சாதிக்காததை ஆன்மிகம் சாதிக்கிறது!

**வா**னைப் பிளக்கும் கோஷங்கள் இல்லை; காதுகளைக் கிழிக்கும் வாக்குறுதிகள் இல்லை. எல்லாச் சாதனைகளும் அமைதியாகவே நடந்து கொண்டிருக்கின்றன. எல்லாக் கிராமங்களும் நகரங்களின் பளபளப்பில் ஒளிமங்கிக் கொண்டிருக்கும் போது, குன்றக்குடி மட்டும் தனித்து நிற்கிறது. எதனால்?

''எல்லாம் எங்கள் சாமி (குன்றக்குடி அடிகளார்)யின் வழிகாட்டுதலால்தான்'' என்கிறார் குன்றக்குடி கிராமத் திட்டக் குழுவின் உறுப்பினரான மருது பாண்டியன்.

''அரசாங்கத்திடமிருந்து உதவிகளைத் தான் எதிர்பார்க்க வேண்டுமே தவிர, இலவசங்களை அல்ல என்பதை சாமி எங்களிடம் சொன்னார். எங்களுக்கு என்ன தேவை என்பதை எங்களைக் கொண்டே திட்டமிடச் செய்தார். அதற்காகத்தான் எங்கள் கிராமத் திட்டக் குழு. அதன்படி ஒவ்வொரு மாதத்தின் நான்காவது சனிக்கிழமைகளில் எங்கள் திட்டக் குழு கூடுகிறது. திட்டமிடுகிறது. திட்டமிடப்பட்டவற்றுக்கெல்லாம் ஓர் இலக்கு நிர்ணயித்துக் கொண்டு, அந்த இலக்குக்குட்பட்ட காலத்திற்குள் அந்தத் திட்டங்களைச் செயலாற்றுகிறது. அவற்றில் ஏதாவது பிரச்னைகள் ஏற்பட்டால் சாமி முன்வந்து பிரச்னைகளைத் தீர்க்க உதவுகிறார்.

''கடந்த 77—ம் ஆண்டு சாமியின் முயற்சியால் எங்கள் கிராமத் திட்டக் குழு ஏற்பட்ட பிறகுதான், குன்றக்குடி பாரதி தொழிற் கூட்டுறவு குளோரேட் தொழிற்சாலை, பெரியார் முந்திரி தொழிலாளர் தொழிற் கூட்டுறவுச் சங்கம், பெரியார் முந்திரி ரெட் ஆக்ஸைடு பெயிண்ட் தொழிற்சாலை, குன்றக்குடி பசுமைப் பண்ணை, அறிஞர் அண்ணா லெட் ஆசிட் பாட்டரி தொழிற்சாலை, ஷெனாய் அலுமினிய கட்டடப் பொருள் தொழிற்சாலை, காமராசர் பாலிதீன் ஓவன் சாக்ஸ் தொழிற்சாலை... என்று பல்வேறு கூட்டுறவு நிறுவனங்கள் எங்கள் கிராமத்தில் துவங்கப்பட்டன. கால் நடை மருந்தகம், திருவள்ளுவர் சோலை பழத்



* லலிதா



* பாலிதீன் பை தொழிலகம்: ஒவ்வொரு தொழிலாளியும் பங்குதாரர்...



* அரசு தோட்டக்கலைப் பண்ணையால் முப்பத்துமூன்று பேருக்கு வேலை...



* மருது பாண்டியன்

தோட்டம், அன்னை இந்திரா நேபாளித் தரிக்கூடம், பட்டுப் புழு வளர்ப்பு மாதிரிப் பண்ணை, பனைநார் பிரஷ் தொழிற்சாலை, தேசிய ஆராய்ச்சி வளர்ச்சிக் கழகம்... போன்ற அரசு நிறுவனங்களும் ஏற்பட்டன.

''இந்த நிறுவனங்களெல்லாம் ஏற்பட்ட பிறகுதான், எங்கள் கிராமத்திலுள்ள ஒவ்வொரு குடும்பத்திலும் ஒருவருக்கு வேலை என்கிற எங்கள் இலக்கு பூர்த்தியானது. இப்போது இரண்டாவது நபருக்கு வேலை என்கிற இலக்கில் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம்!'' என்கிறார் மருது பாண்டியன்.

''எங்களுக்கு அரை ஏக்கர் நிலம்தான் உண்டு. அதுவும் மானாவாரி பூமி. மழை இல்லாவிட்டால் அதிலிருந்து சுத்தமாக ஏதும் விளையாது. வீட்டுக்காரர் கூலி வேலைக்குச் சென்றால்தான் உண்டு. இந்த நிலையில்தான் எங்களுக்குச் செம்மறியாடுகள் வாங்க பேங்க் லோன் கிடைத்தது. நாற்பது ஆடுகள் வாங்கினோம். இப்போதுதான் குடும்பத்தில் பிரச்னையில்லாமல் சாப்பிட முடிகிறது...'' என்கிறார் ஆண்டாத்தாள் என்கிற பெண்மணி.

''இவரைப் போல் குன்றக்குடியைச் சுற்றியுள்ள இருபதுக்கும் மேற்பட்ட கிராமங்களிலிருக்கும் இருநூற்று எண்பத்தைந்து பேருக்கு ஆட்டு லோன் வாங்கிக் கொடுத்திருக்கிறோம்!'' என்கிறார் மருது பாண்டி

யன்.

"அது சரி. கடன்களைத் திருப்பிக் கட்டும் விஷயத்தில் உங்கள் கிராம மக்கள் எப்படி?"

"எங்கள் சுற்று வட்டாரக் கிராமங்களில் கொடுத்த கடன் வசூலாகவில்லை என்கிற பேச்சுக்கே இடமில்லை. அரசாங்கமே கடன்களைத் தள்ளுபடி செய்த போது கூட, எங்கள் கிராம மக்கள் அந்தக் கடன்களைத் திருப்பிக் கொடுத்துத்தான் ஆக வேண்டும் என்றார் சாமி. அதன்படியே அனைவரும் திருப்பிக் காட்டினார்கள். நான் முன்பே சொன்னபடி, முதலில் மக்களிடமிருந்த இலவச மனப்பான்மையைச் சாமி ஒழித்தார். உழைப்பவர்களுக்குத்தான் எதையும் பெறுகிற உரிமை என்கிற மனோநிலையை வளர்த்தார். அதனால்தான், பெரிதாக ஒரு வேலையும் செய்யத் தெரியாதவர்களுக்குக் கூட 'ஒப்பந்தத் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கம்' என்ற ஒரு சங்கத்தை உருவாக்கிக் குறைந்தபட்சம் மண் வெட்டுகிற வேலையாவது செய்தாக வேண்டும் என்கிற நிலையை உருவாக்கினார் சாமி.

"இதோ பாருங்கள்... உழைப்பால் எதையும் சாதிக்கலாம் என்பதற்கு இந்த அரசு தோட்டக்கலைப் பண்ணையே ஒரு சாட்சி. இந்தத் தொண்ணூறு ஏக்கர் நிலமும் முன்பு ஒன்றுமில்லாத தரிசாகத்தான் கிடந்தது. சாமியின் ஆலோசனை மற்றும் முயற்சியின் பேரில்தான் அரசு பழத் தோட்டம் உருவானது. கூடவே, எங்கள் கிராமத்தைச் சேர்ந்த முப்பத்து மூன்று பேருக்கு இந்தத் தோட்டத்தின் மூலமாக நிரந்தர வேலையும் கிடைத்திருக்கிறது.

"இப்படி ஒருபுறம் நாங்கள் தொழில்களைப் பெருக்கிக் கொண்டே சென்றாலும் மறுபுறம் இயற்கைச் சமநிலையும் பாதிக்கப்படாமல் பார்த்துக் கொள்கிறோம். அதற்காகச் சமூகநலக் காடுகள் வளர்ப்பில் தீவிரமாக இருக்கிறோம். அதன் முதல் கட்டமாக இப்போது எட்டாயிரம் புளியங் கன்றுகளை நட்டுள்ளோம். எங்கள் கிராமத்திலுள்ள யாரும் தங்கள் சொந்த நிலத்திலுள்ள மரங்களைக் கூட ஊரின் அனுமதியில்லாமல் வெட்டக் கூடாது என்று ஒரு கட்டுப்பாடு. வெட்டித்தான் ஆக வேண்டும் என்கிற கட்டாயம் ஏற்படுகிற போது, ஒன்றுக்கு இரண்டு மரக் கன்றுகளை அவர்கள் புதிதாக நட்டுப் பாதுகாத்து வளர்க்க வேண்டும் என்பது எங்கள் ஊரின் நடைமுறை. இது போன்ற அறிவியல் பூர்வ நடவடிக்கைகளுக்கெல்லாம் 'சிக்ரி' என்று சொல்லப்படும் காரைக்குடியிலுள்ள 'சென்ட்ரல் எலக்ட்ரோ கெமிகல் ரிசர்ச் இன்ஸ்டிடியூட்' விஞ்ஞானிகளும் மற்ற அரசு அதிகாரிகளும் எங்களுக்கு ஆலோசனை வழங்கி ஊக்குவிக்கிறார்கள்..." என்றார் மருது பாண்டியன்.

"எங்கள் கிராமங்களிலுள்ள வீடுகளின் புழக்கடைகள் வெறுமனே இருக்கக் கூடாது என்பது சாமியின் கண்டிப்பான வேண்டுகோள். அவற்றிலெல்லாம் வீட்டுக்குத் தேவையான காய்கறிச் செடிகளை வளர்க்க வேண்டும். அப்படி என்னென்ன காய்கறிகளை வளர்க்கிறார்கள் என்பதைக்

"'குன்றக்குடியில் எங்கு திரும்பினாலும் 'எங்கள் சுவாமியால் இந்தத் தொழிலைத் துவங்கினோம்; அந்தத் தொழிலைத் துவங்கினோம்...' என்று தொழிலகங்களைக் காட்டுகிறார்கள். ஆதீனகர்த்தரான தாங்கள் சமயப் பணியிலிருந்து சமூகப் பணிக்கு எப்படி மாறினீர்கள்?"

"மனித நேயத்தை மறந்தால் சமயமே கிடையாது. மனித நேயத்தை வளர்த்து மக்களிடையே உள்ள வித்தியாசங்களை அகற்றுவதுதான் சமயப் பணி. மனிதனுக்கு மனிதன் சமமாக வேண்டுமானால் பொருளாதார வளர்ச்சி அவசியம் வேண்டும். மனிதர்களின் வறுமைக்கு ஊழ்வினை காரணமாக இருக்கலாம். ஆனால் அந்த ஊழ்வினையைப் போக்குவதற்காகத்தானே இந்தப் பிறவியை எடுத்திருக்கிறோம். ஆக, வறுமை என்னும் ஊழ்வினையிலிருந்து உய்வுபெறுவதற்குச் சமயம் உதவ வேண்டுமே தவிர, ஊழ்வினையைக் காரணம் காட்டி யாரையும் வறுமையில் வாட விடக் கூடாது. சொல்லப் போனால் பாதிக்கப்பட்ட மக்களுக்குத்தான் சமயத்தின் உதவி அவசியமாகிறது. இந்த வகையில் நான் சமயப் பணி செய்து கொண்டிருப்பதாகத்தான் உணர்கிறேன்."

"சமயப் பணியும் சமூகப் பணியும் வேறு வேறானவை அல்ல என்கிறீர்கள்..."

"ஆமாம். நான் சோவியத் ரஷ்யாவுக்கும் சீனாவுக்கும் சென்று வந்த பிறகு மார்க்ஸிய சித்தாந்தங்களை ஆழ்ந்து படித்தேன். அதனால் எனது சமயப் பார்வையில் ஒரு மாற்றம் நிகழ்ந்தது. நமது மிகப் பெரிய செல்வமான மக்கட் செல்வத்தை நாட்டின் முன்னேற்றத்துக்கு உதவுமாறு நாம் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை என்று உணர்ந்தேன். உதாரணமாக, டூத் பிரஷ், டூத் பேஸ்ட், சோப்பு வகைகள் போன்ற எத்தனையோ அம்சங்களைக் குடிசைத் தொழில்களாகவே செய்ய முடியும். அப்படிச் செய்தால் பல லட்சக்கணக்கான கிராம மக்களுக்கு வேலை வாய்ப்பும் உபரி வருமானமும் கிட்டும். வாழ்க்கைத் தரமும் உயரும். எனவே இவை போன்ற சில பொருள்களைக் குடிசைத் தொழிலுக்கு மட்டுமே என்று ஒதுக்கிவிட அரசு சட்டம் கொண்டு வரலாம். அப்போது தேசத்தின் பொருளா

# "சமய வாழ்க்கைதான் சமூகப் பணிக்கு உற்சாகம் அளிக்கிறது..."



—குன்றக்குடி அடிகளார் கூறுகிறார்!

தாரமே பிரமிக்கத்தக்க ஆரோக்கியமான மாற்றத்தை அடையும். ஆனால் மத்திய, மாநில அரசுகள் பரிசோதனை முயற்சியாகக் கூட தொழில் — பொருளாதாரக் கொள்கைகளை உருவாக்கி அமுல்படுத்திப் பார்க்க முன்வராத போது நாமே நம்முடைய முயற்சியில் நம்மால் இயன்றதைச் செய்து பார்க்கலாமே என்ற எண்ணம் தோன்றியது. அதற்குக் கிராம மக்களை ஒன்று திரட்டிச் செயல்படச் செய்தாக வேண்டும் என்று நினைத்தேன். அதன் விளைவாகத்தான் குன்றக்குடி கிராமத் திட்டக் குழு உருவானது. 'உங்களுக்கு என்ன தேவை என்பதை நீங்களே திட்டமிடுங்கள்; நான் ஆலோசனை வழங்குகிறேன்' என்றேன். அதன்படியே அந்தத் திட்டக்குழுவும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.''

''இந்தக் கிராமத் திட்டக்குழுவுக்கு விஞ்ஞானிகளின் ஒத்துழைப்பை எப்படிப் பெற்றீர்கள்?''

''ஒரு சமயம் கொரட்டி என்கிற கிராமத்தில் திடீர் திடீரென்று வீடுகள் தீப்பற்றி எரிந்தன. கிராம மக்களெல்லாம் அது தெய்வ குற்றத்தாலும், துஷ்ட தேவதைகளாலும் ஏற்படுவதாகவே நம்பினார்கள். நான் அவ்வாறு நம்பவில்லை. அதற்கு ஓர் அறிவியல் காரணம் இருக்கவேண்டுமென்றே நம்பினேன். அதற்காக அந்தச் சாம்பலை எடுத்து வந்து ஆராயச் சொன்னேன். ஆயினும் காரணம் கண்பிடிக்க முடியவில்லை. விஞ்ஞானிகளெல்லாம் 'கண்டுபிடிக்க முடியவில்லை' என்றார்கள். அப்போது நான், 'இன்றைக்குக் கண்டுபிடிக்க முடியவில்லை என்பது உண்மைதான். ஆயினும் இதற்கான காரணத்தை ஒருநாள் கண்டு பிடித்தே தீருவோம்' என்றேன். சமயவாதியான நான் விஞ்ஞானத்தின் பால் கொண்டுள்ள நம்பிக்கையைக் கண்ட காரைக்குடி 'சிக்ரி' விஞ்ஞானிகள் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். அதன் பிறகு எங்கள் கிராமத் திட்டக்குழுவுக்கு அவர்களே முன்னின்று செயல்படத் துவங்கி விட்டார்கள்!''

''ஆக, சமயத்துக்கும் மூட நம்பிக்கைக்கும் சம்பந்தமில்லை என்கிறீர்கள்...''

''நிச்சயமாக. மூட நம்பிக்கை கூடாது என்பதோடு எங்கள் கிராம மக்களிடம் அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைக்கக் கூடாது; உழைப்பில்தான் நம்பிக்கை வைக்க வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறேன். அதனால் குன்றக்குடி கிராமத்திற்குள் எங்கும் லாட்டரி விற்பனையைப் பார்க்கவே முடியாது. அதேபோல்தான் சோதிடமும். யாராவது ரகசியமாகச் சென்று வெளியூரில் பார்த்துக் கொள்கிறார்களோ என்னவோ, உள்ளூரில் யாரும் பார்க்க மாட்டார்கள்! இன்னும் சொல்லப் போனால் இருக்கிற கோயில்களைச் சிதிலமாகாமல் பேணிப் பாதுகாப்பதற்குப் பதில் புதிய கோயில்களை உருவாக்கிக் கொண்டு போவதில் கூட எனக்கு நம்பிக்கை இல்லை.''

''குன்றக்குடி மற்றும் அதன் சுற்று வட்டாரக் கிராமங்களுக்குத்தான் தாங்கள் வழிகாட்டுதல் செய்கிறீர்களா அல்லது மற்ற கிராமங்களுக்கும் செய்கிறீர்களா?''

''இப்போது பசும்பொன் தேவர் மாவட்டம் முழுவதிலுமாக நூற்று மூன்று கிராமங்களை எடுத்துக் கொண்டு, கிராம ஏற்புத் திட்டப் பணியைத் துவங்கியுள்ளோம்.''

''தங்களின் சமய வாழ்க்கை இந்தச் சமூகப் பணிக்கு எந்த வகையில் உதவுவதாகக் கருதுகிறீர்கள்?''

''எனது சமய வாழ்க்கைதான் எனது சமூகப் பணிகளுக்கான உற்சாகத்தையும் ஆன்ம பலத்தையும் தருகிறது.''

''தங்களின் சமய வாழ்க்கையைப் பிறருக்கும் வலியுறுத்துகிறீர்களா?''

''இல்லை. விருப்பப்பட்டவர்களுக்கு மட்டுமே நான் சமய வகுப்புகள் நடத்துகிறேன். நான் வலியுறுத்துவதெல்லாம் உழைப்பையும் மனித நேயத்தையும் மட்டும்தான்!''

---

கண்காணித்துத் தினந்தோறும் சாமியிடம் போய்ச் சொல்ல வேண்டியது எங்கள் இளைஞானியார் மகளிர் மன்றத்தின் அன்றாடக் கடமைகளுள் ஒன்று'' என்கிறார் அம்மன்றத்தின் செயலாளர் என். லலிதா.

''இது மட்டுமல்ல; எந்தக் குடும்பத்திலுள்ள குழந்தைகளும் பள்ளிக்குச் செல்லாமல இருக்கக் கூடாது. இரண்டு குழந்தைகளுக்குப் பிறகு கணவன் — மனைவி இருவரில் ஒருவர் குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டே தீர வேண்டும். ஒவ்வொரு குடும்பத்திற்கும் சிறு சேமிப்பு என்பது

கட்டாயம். அதே போல் ஒவ்வொரு குடும்பத்துப் பெண்களும் கைத் தொழில்களைக் கற்றுக்கொள்ள வேண்டும். இவற்றை யாராவது கடைப்பிடிக்கவில்லையென்றால் எங்கள் மகளிர் மன்றத்தினர் சாமியிடம் போய்ப் புகார் சொல்லுவோம். அவர் உடனடியாகச் சம்பந்தப்பட்ட குடும்பத்திற்கு நேரடியாகவே சென்று காரணங்களைக் கேட்டறிந்து பிரச்னைகளைத் தீர்க்க உதவுவார்'' என்கிறார் லலிதா.

குன்றக்குடியைச் சுற்றிப் பார்த்தோம். சிறுதொழில்கள் இல்லாத இடமே இல்லை. சுற்று வட்டாரக் கிராமங்களிலுள்ள பள்ளிகளுக்கான சாக்கட்டிகள் வேண்டுமா? அவற்றைக் குன்றக்குடியிலேயே தயாரித்து அனுப்புகிறார்கள். டீ.வி. ஆண்டனாவா? கடைகளில் கிடைப்பதை விடக் குறைந்த விலையிலேயே குன்றக்குடியில் தயாராகிறது. பஸ் — லாரி — கார் பாட்டரிகளா? பெரிய கம்பெனிகளின் பாட்டரிகளை விடக் குறைந்த விலைகளில் தரமான பாட்டரிகள் தயாரிக்கிறார்கள். குன்றக்குடிக்குத் தேவையான பாலை அங்குள்ள கூட்டுறவுச் சங்கமே உற்பத்தி செய்கிறது. அந்தக் கூட்டுறவுச் சங்கம் பால் மட்டுமே விற்பனை செய்யவில்லை. நாற்பதே பைசாவுக்குத் தரமான மோரையும் விற்பனை செய்கிறது. பாலிதீன் பைகள் வேண்டுமா? தேவையான அளவுகளில் குன்றக்குடியில் உற்பத்தி செய்யப்படுகிறது!

''இங்குள்ள பல தொழில்களும் கூட்டுறவு முறைகளிலேயே செய்யப்படுகின்றன. அதில் உழைக்கும் ஒவ்வொரு தொழிலாளியும் அந்த நிறுவனத்தின் பங்குதாரர். எனவே இங்கு சுரண்டலுக்கு இடமில்லை; சுரண்டலுக்கு இடமில்லாத போது தொழில் தகராறுகள் எங்கிருந்து வரும்? அதோடு ஒவ்வொருவருக்கும் இவை அவரவர் நிறுவனங்களாகவே இருப்பதால் அவரவரும் தமது முழுத் திறமையையும் பயன்படுத்தி உழைக்கிறார்கள்'' என்கிறார் குன்றக்குடி அடிகளார்.

பொதுச் சொத்துதானே, எப்படிப் போனால் என்ன என்கிற எண்ணம் குன்றக்குடியில் கிடையாது. இதற்குச் சரியான உதாரணம், குன்றக்குடியிலுள்ள காமராஜர் சிறுவர் பூங்கா. அங்கு ஒரு சிறிய நூலகமும் உண்டு. அதில் பொழுது போக்குவதற்குச் சிறிய டீ.வி. பெட்டி, செஸ், கேரம் போன்ற விளையாட்டுப் பொருள்களும் இருக்கின்றன. மாலையில் அங்கு வருகிற சிறுவர், சிறுமியர் இவற்றைப் பயன்படுத்துவதற்காக மட்டுமே வருவது கிடையாது.

பூங்காவுக்குள் நுழையும்போதே குப்பைகள் தென்பட்டால் அதைப் பெருக்கிச் சுத்தப்படுத்துகிறார்கள். செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுகிறார்கள். சிறுமியர் ஆங்காங்கே கோலமிட்டு அழகுபடுத்துகிறார்கள். யாராவது வந்து செய்யட்டுமே என்று யாரும் சும்மா இருப்பதில்லை. 'இது நம்முடைய இடம்; நாம்தான் எல்லாவற்றையும் செய்ய வேண்டும்' என்கிற எண்ணம் அவர்களிடையே வேரூன்றி வளர்ந்திருக்கிறது. சிறுவர், சிறுமியர் முதல் பெரியவர்கள் வரை அனைவரிடமும் வளர்ந்திருக்கிற இந்த எண்ணம்தான் குன்றக்குடியை ஒரு குட்டி ஜப்பானாக உருவாக்கிக் கொண்டிருக்கிறது. எத்தனையோ கிராமங்களைப் போல் சோர்ந்து கிடக்காமல், ஒரு துருவ நட்சத்திரம் போல் தனித்து நின்று, மற்ற கிராமங்களுக்கெல்லாம் வழிகாட்டியாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது குன்றக்குடி. அதனால்தான் குன்றக்குடியைப் பார்த்து, **"This is what I would like for all other villages"** என்றார் மறைந்த பிரதமர் இந்திரா காந்தி.

**— இளங்கோவன்**

அட்டை வண்ணப்படமும் மற்ற படங்களும்! **சுபா**



''மன்னா! நாட்டில் விலைவாசி எல்லாம் ஏறிவிட்டது! மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள்.''

''அப்படியா! அமைச்சரே, உடனே, 'இளவரசுப் பட்டம் யாருக்கு?' என்ற வாரிசுப் பிரச்னையைக் கிளப்பிவிடும். மக்கள் கொஞ்சம் தங்கள் கவலையை மறக்கட்டும்!''

— அ. நந்தகுமார்.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...




ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற் கொள்ளலாம்.

**"நேர்முகப் பயிற்சியும் உண்டு"**

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

**உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!**

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண்: 4986, 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.**

# ரசனைகள்

எனக்கு நீண்ட நாட்களாகவே அந்த எழுத்தாளரைச் சந்திக்க வேண்டுமென்கிற ஆவல். என் பொழுது போக்குகளில் ஒன்று புத்தகங்கள் படிப்பது அதிலும் காட்டூர் கோபாலனின் கதைகள் என்றால் மிகவும் இஷ்டம். வட்டாரச் சொற்களில் கதைகளைச் செதுக்குவார்.

அவரைப் பார்ப்பதற்கு இப்பொழுது ஓர் அரிய சந்தர்ப்பம் ஏற்பட்டுள்ளது. என் அலுவலக வேலையாகக் காட்டூருக்குப் பக்கத்து டவுன் வரை போக வேண்டியிருந்தது.

அங்கு சென்றவுடன்தான் ஞாபகத்துக்கு வந்தது, என் அபிமான எழுத்தாளர் வசிக்கும் ஊர் பக்கத்தில்தான் உள்ளது என்பது.

உடனே முடிவெடுத்துக் காட்டூர் செல்லும் பஸ்ஸைத் தேடினேன். பல நபர்களிடம் விசாரித்து டவுன் பஸ் நம்பரைத் தெரிந்து கொண்டேன். அதுவும் அந்த ரூட்டில் அடிக்கடி பஸ் போகாதாம். என்ன இருந்தாலும் எழுத்தாளரைச் சந்தித்து விடுவது என்ற முடிவுக்கு வந்து பஸ்ஸுக்காக காத்திருந்தேன்.

எனக்கு விவரம் தெரிந்து புத்தகம் வாசிக்க ஆரம்பித்த போது, வாசிப்பில் அவ்வளவாக இஷ்டமில்லை.ஒருகுறிப்பிட்ட வயதில் காட்டூர் கோபாலனின் எழுத்தைப் படித்தவுடன்தான் எனக்குப் படிக்கவே பிடித்தது.

காட்டூர் கோபாலனின் எல்லா நாவல்களையும் ஒரு வெறியோடு வாசித்தேன். அவருடைய எழுத்தின் மேல் எனக்கு எந்த அளவுக்கு வெறி என்பதற்கு ஒரு சம்பவத்தைச் சொல்லலாம்.

என் கல்யாணத்துக்காகப் பல இடங்களில் என் பெற்றோர் பெண் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஓர் இடத்தில் என் பெற்றோருக்குப் பெண்ணை மிகவும் பிடித்துப் போயிற்று.

சம்பிரதாயத்துக்கு என்னிடம் பெண் பார்க்கப் போகலாம் எனச் சொன்னார்கள்.



போனோம்.

பெண் பார்க்கும் படலம் நடந்து கொண்டிருந்தது. பெண்ணை அழைத்து வந்து காட்டினார்கள். எனக்கும் பெண்ணைப் பிடித்துப் போயிற்று. ஆயினும் நான் என் சகோதரியிடம் சில கேள்விகள் கொடுத்து, அதைப் பெண்ணிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுமாறு சொல்லியிருந்தேன்.

சீக்கிரத்தில் நல்ல சேதி சொல்வதாக என் குடும்பத்தினர் சொல்லி விட்டுப் புறப்பட்டனர்.

நான் என் சகோதரியை அழைத்துக் கேட்டேன். அந்தப் பெண் சினிமாச் செய்திகளைத் தவிர வேறெதையும் வாசிக்க மாட்டாளாம் என்று என் சகோதரி சொன்னதும் எனக்குச் சுவாரஸ்யம் போய் விட்டது. அப்படியானால் காட்டூர் கோபாலனின் எழுத்துக்களை எங்கே படித்திருக்கப் போகிறாள்! அப்படிப்பட்டவளைத் திருமணம் செய்து கொண்டால் வாழ்க்கை என்னாவது? பிடிவாதமாக நான் அப்பெண்ணை மறுத்து விட்டேன்!

இதற்குள் காட்டூர் செல்லும் பஸ் வந்து நின்றது. கூட்டம் எக்கச்சக்கம். நானும் அடித்துப் பிடித்து ஏறினேன். கிராமத்து ஜனங்கள் மூட்டை முடிச்சுக்களுடன் ஏறினர்.

குண்டும் குழியுமான ரோட்டில் பஸ் குதித்துக் குதித்துச் சென்றது. ஒரு வழியாகக் காட்டூர் வந்து சேர்ந்தது அந்த பஸ். கூட்டத்திலிருந்து நசுங்கிப் போய் இறங்கினேன். அங்கே முண்டாக கட்டிக் கொண்டு நின்ற ஒரு பெரியவரிடம் கேட்டேன்: ''ஐயா! காட்டூர் கோபாலன் வீட்டுக்கு எப்படிப் போகணும்?''

''கிழக்கப் போகணும்... இருங்க. வழி காட்டப் பொடியனை வரச் சொல்லுதேன்'' என்று ஒரு சிறுவனைக் கைதட்டி அழைத்தார். கோவணத்துடன் இருந்த ஒரு சிறுவன் ஓடி வந்தான்.

''இந்தய்யாவைக் காட்டூரைய்யா வீட்டுக்கு அழைச்சுக்கிட்டுப் போடா'' என்றார்.

சிறுவன் ஆர்வத்துடன், ''குடுங்கய்யா. நான் தூக்கியாறேன்,'' என்றான் என் கையில் வைத்திருந்த சிறிய பெட்டியைப் பார்த்து.

''வேண்டாம். கனமில்லே'' என்று மறுத்து விட்டு, அவன் கூடவே நடந்தேன்.

ஒரு வீட்டுக்கு அருகில் வந்ததும், ''அதோ வேலி போட்டிருக்கே, அந்த வீடுதான்...'' எனச் சொல்லிவிட்டுச் சிறுவன் திரும்பி ஓடி விட்டான்.

நான் மெல்ல அந்த வீட்டை நோக்கி நடந்தேன். கிராமங்களுக்கே உரிய ஓட்டு வீடு. சுற்றிலும் வேலி அமைத்த வாழைத் தோட்டத்திற்கு நடுவில் அமைதியாக இருந்தது வீடு.

கிராமத்தில்தான் இருக்கிறார் எனத் தெரிந்திருந்தாலும், இதுமாதிரியான படுகிராமத்தில் இருப்பார் என நான் எதிர்பார்க்கவில்லை.



'மெல்லத் திறந்தது கதவு' என்ற படம் வெளியான தினத்திலும் மீண்டும் அதையே இரண்டு வாரங்கள் கழித்தும் பார்த்திருந்தால், ஒரு பெரிய வித்தியாசத்தைக் கண்டிருப்பீர்கள். அது என்ன தெரியுமா?

படம் வெளியான இரண்டு வாரங்கள் கழித்து, கதை தெளிவாகப் புரியவும், சுவாரசியத்துக்காகவும், முதல் பகுதியை இரண்டாம் பகுதியாகவும், இரண்டாவது பகுதியை முதல் பகுதியாகவும் மாற்றி அமைத்தார்கள்!

— ஷண்முக சுந்தரம்.

வீட்டின் முன்னே சில குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. நான் கொஞ்சம் தயங்கி ஒரு குழந்தையைப் பார்த்துத் ''தம்பி!'' என அழைத்தேன்.

சிறுவன் திரும்பிப் பார்த்து விழித்தான். எப்படிக் கேட்பது என யோசித்தேன். அதற்குள் உள்ளிருந்து வந்த நடுத்தர வயதுப் பெண்மணி, ''வாங்க... யாரைப் பார்க்கணும்?'' என்றாள்.

''எழுத்தாளர் காட்டூர் கோபாலனை... அவரு இருக்கிறாரா?''

''இருக்காக... உள்ளார வாங்க...'' என்றார்.

நான் தயங்கியபடியே உள்ளே சென்று அமர்ந்தேன்.

சற்று நேரத்தில் இடுப்பில் வேஷ்டியும் சட்டையில்லா மார்பில் துண்டுமாக வந்தார் என் அபிமான எழுத்தாளர்.

நான் எழுந்து, ''வணக்கம் சார்! நான் உங்கள் ரசிகன்,'' என்றேன்.

''அப்படீங்களா...? ரொம்பச் சந்தோஷம்.

ரம்யப்ரபா

உட்காருங்க... உட்காருங்க...'' என உபசரித்தார்.

''எந்த ஊரில் இருந்து வர்றீங்க? எப்படி பஸ் பிடிச்சீங்க? எங்க ஊருக்கு வர்றதுன்னாப் பெரிய கஷ்டமாச்சே!'' எனக் கலகலவெனச் சிரித்தார்.

நான் எல்லா விவரங்களையும் சொன்னேன். அவருடைய எல்லாக் கதைகளையும் பாராட்டிப் பேசினேன். அவர் எல்லாவற்றையும் சிரித்துக் கொண்டே கேட்டுக் கொண்டார்.

எனக்கு அவருடைய எளிமை ஆச்சரியத்தைத் தந்தது. எழுத்தாளர் என்ற பந்தா கொஞ்சம் கூட இல்லாமல் அவர் பேசியது எனக்கு வியப்பைத் தந்தது.

அவருடைய கதைகளைப் பற்றியும் அது எழுத நேர்ந்த விதத்தைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தோம். இடையில் அவருடைய மனைவி பெரிய லோட்டாவில் இருவருக்கும் காப்பி கொண்டு வந்து கொடுத்தார்.

எழுத்தைப்பற்றியேபேசிக்கொண்டிருந்ததில் நேரம் போனதையே நான் கவனிக்கவில்லை. கவனித்து அவரிடம்விடைபெற்றுக் கொள்ளலாம் என்ற போது அவரே சொன்னார், ''உங்க பஸ் போயிருக்கும். இனி காலையிலதான் உங்களுக்கு பஸ். அதனால என் வீட்டிலே தங்கிட்டுப் போகலாம். காலையில் சீக்கிரம் பஸ் உண்டு'' என்றார்.

என் அபிமான எழுத்தாளருடன்தங்குவதென்றால் கசக்கவா செய்யும்! சரியென்று சம்மதித்தேன்.

பிறகு குடும்பத்தைப் பற்றிப் பேசினோம்.

''உங்க துணைவியார் உங்க கதைகளைப் படிச்சுட்டு என்ன சொல்வாங்க?'' என்றேன்.

அவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு, ''அவ என்னோட கதைகளை வாசிக்கிறதில்லே. அவளுக்குஎழுதப்படிக்கத் தெரியும். ஆனாலும் பத்திரிகைகளோ, கதைகளோ வாசிக்கிறதில்லே. அதுக்கு அவளுக்கு நேரமுமில்லே. வயக்காட்டுக்குப் போறதுக்கும் குழந்தைகளைப் பார்த்துக்கிறதுக்குமே அவளுக்கு நேரம் சரியாயிருக்கு...''

''இதுல உங்களுக்கு வருத்தமில்லையா?''

''வருத்தப்பட என்ன இருக்கு?''

''உங்க கதைகளை உங்க மனைவியே படிக்கலைன்னா... இது உங்களுக்கு அவமானமா... வருத்தமாத் தெரியலையா...?''

''அப்படியில்லே. அவ நல்ல மனைவியா இருக்கா. என்கிட்டேயும் குழந்தைங்ககிட்டேயும் அன்பா நடந்துக்கறா. பொறுப்பாக் குடும்பம் நடத்தத் தெரிஞ்சிருக்கு. என் எழுத்தைப் பாராட்டத்தான் நீங்க... உங்களைப் போல எத்தனையோ ரசிகர்கள் இருக்காங்களே...! அவளும் அதையே செய்துக்கிட்டு இருந்தாக் குடும்பப் பொறுப்புகளைப் பொறுப்பா யாரு கவனிப்பா? அவ என் எழுத்தைப் படிச்சு ரசிக்காட்டியும் வயக்காட்டிலே பருத்திச் செடியின் வளர்ச்சியைப் பார்த்துப் பார்த்து ரசிக்கிறா. மாடு, கன்றுகளையெல்லாம் நன்றாக வளர்த்துப் பராமரிக்க ரசிக்கிறா. எனவே அவளுக்கும் ரசனைகள் இருக்கு. என் கதைங்க மட்டும் தான் வாழ்க்கையிலே ரசனைக்குரிய விஷயமா என்ன?'' என்று அவர் சிரித்துக் கொண்டே சொன்னபோது, எனக்கு எல்லாமே புரிந்து விட்டது போலிருந்தது!

---



''நீ எழுதின கதையைப் பத்திரிகைக்கு அனுப்பு முன்பு ஒரு காப்பி எடுத்து வைச்சுக்கோ.''

''எதுக்கு வீண் செலவு? அது முன்னே வெளிவந்த புத்தகத்தையேதான் வைச்சுக்கிட்டிருக்கேனே, போதாதா?''

— லலிதா செல்லப்பா.

''அரசியலிலிருந்தே விலகப் போறீங்களாமே! அவ்வளவு வெறுத்துப் போவானேன்?''

''பின்னே என்னங்க...? இருபது வருஷமாக் கட்சியிலிருக்கேன். கேவலம் ஒரு கோஷ்டிக்குக் கூடத் தலைவராக முடியலையே!''

— ஞா. ஞானமுத்து.



# சிவகாமியின் சபதம்

## ஒன்பதாம் அத்தியாயம்

## விடுதலை

கயிற்றின் வழியாக மேலே ஏறிய பரஞ்சோதி கூரையை அணுகியபோது, இரண்டு இரும்புக் கரங்கள் தன் புயங்களைப் பிடித்து மேலே தூக்கி விடுவதை உணர்ந்தான். மறுகணமே தான் மேற் கூரையில் நிற்பதையும், தனக்கு எதிரில் ''பேசவேண்டாம்'' என்பதற்கு அறிகுறியாக உதட்டில் ஒற்றை விரலை வைத்துக் கொண்டு புத்த பிக்ஷு நிற்பதையும் பார்த்தான். அவருக்குப் பின்னால் இன்னொரு இளம் புத்த சந்நியாசி நிற்பதும் தெரிந்தது. பெரிய பிக்ஷு ஜாடை காட்டியவுடன் இளம் புத்தன் கயிற்றை மேலே இழுத்துச் சுருட்டி ஒரு காவித் துணிக்குள் அதை வைத்துக் கட்டினான்.

பரஞ்சோதி கூரைமேல் நின்ற வண்ணம் சுற்றும் முற்றும் பார்த்தபோது, கண்ணுக் கெட்டிய தூரம் காஞ்சி நகரத்து மாட மாளிகைகளின் உப்பரிகைகள் வெண்ணிலாவில் தாவள்யமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

இதற்குள் பெரிய பிக்ஷுவானவர் சிறைச்சாலைக் கூரையின் துவாரத்தை ஓடுகளைப் பரப்பி அடைத்துவிட்டு, பரஞ்சோதியை ஒரு விரலால் தொட்டுத் தம் பின்னால் வரும்படி சமிக்ஞை செய்தார். அவரைப் பின்தொடர்ந்து பரஞ்சோதியும் இளம் பிக்ஷுவும் ஓட்டுக் கூரைகளின் மேலேயும், நிலா மாடங்கள் — மண்டபங்களின் மேலேயும் ஓசைப் படாமல் மெதுவாக நடந்து சென்றார்கள். வீதியில் ஏதாவது சந்தடி கேட்டால் புத்த பிக்ஷு உடனே தம் பின்னால் வருவோருக்கு ஜாடை காட்டிவிட்டு உட்கார்ந்து கொள்வார். சந்தடி நீங்கிய பிறகு எழுந்து நடப்பார்.

இவ்விதம் ஒட்டுக்கட்டடங்களை மேற்கூரை வழியாகக் கடந்த பிறகு, ஒரு வீட்டின் முகப்பில் வீதி ஓரத்தில் பன்னீர் மரங்கள் அடர்த்தியாக வளர்ந்திருந்த இடத்துக்கு வந்தார்கள்.

பன்னீர் மரங்களின் அடர்ந்த பசிய இலைகளுக்கு இடை இடையே கொத்துக் கொத்தாகப் பூத்திருந்த பன்னீர் மலர்கள் வெண்ணிலாவில் வெள்ளி மலர்களாகப் பிரகாசித்தன. அம்மலர்களின் சுகந்த பரிமளத்தை இளந் தென்றல் நாலா பக்கமும் பரப்பிக் கொண்டிருந்தது.

புத்த பிக்ஷு வீதியை இரு புறமும் நன்றாகப் பார்த்துவிட்டு அந்தப் பன்னீர் மரங்களில் ஒன்றைப் பிடித்துக் கொண்டு கீழே இறங்கினார். பரஞ்சோதியும் இளம் பிக்ஷுவும் அவ்விதமே இறங்கினார்கள். சிறிது தூரம் நடந்து கோயிலைப் போல் அமைந்த ஓர் அழகிய கட்டடத்தின் வாசலை அடைந்தார்கள்.

அந்தக் கட்டடந்தான் காஞ்சி நகருக்குள் ளிருந்த புத்த விஹாரங்களுக்குள் மிகப் பெரியது. 'இராஜ விஹாரம்' என்று பெயர் பெற்றது. கருணாமூர்த்தியான புத்த பகவானின் இருப் பற்களில் ஒன்று அந்தக் கோயிலின் கர்ப்பக் கிருஹத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தது.

பல்லவ மன்னர்கள் அவ்வப்போது ஒவ்வொரு மதத்தில் பற்றுடையவர்களாயிருந்தாலும், எல்லா மதங்களையும் சம நோக்குடன் பார்த்து அந்தந்த மத ஸ்தாபனங்களுக்கு

மானியம் விடுவது வழக்கம். அவ்விதம் இராஜாங்க மானியத்தைப் பெற்றது இராஜ விஹாரம்.

அன்றியும், காஞ்சியில் சில பெருஞ்செல்வர்கள் பௌத்த சமயிகளாயிருந்தார்கள். அவர்களில் ஒருவனான நன நாஸன் என்னும் வியாபாரி தன்னுடைய ஏகபுத்திரன் வியாதியாய்க் கிடந்தபோது, ''பிள்ளை பிழைத்தால் இராஜ விஹாரத்தைப் புதுப்பித்துத் தருவேனாக'' என்று வேண்டுதல் செய்து கொண்டான். பிள்ளை பிழைக்கவே, ஏராளமான பொருட் செலவு செய்து விஹாரத்தைப் புதுப்பித்தான்.

தாவள்யமான முத்துச் சுண்ணாம்பு பூசப்பட்டிருந்த இராஜ விஹாரம் வெண்ணிலாவில் அழகின் வடிவமாக விளங்கிற்று.

அதைப் பார்த்ததும் பரஞ்சோதி, ''ஆஹா! என்ன அழகான கோயில்!'' என்று கூவினான்.

புத்த பிக்ஷு சட்டென்று நின்று அவனுடைய வாயைப் பொத்தினார். அச்சமயம் அவர்கள் பன்னீர் மரங்களின் நிழலைத் தாண்டி இராஜ விஹாரத்துக்கு எதிரில் திறந்த வெளிக்கு வந்திருந்தார்கள்.

அதே சமயத்தில் இராஜ விஹாரத்துக்கு எதிர் வரிசையிலிருந்த கட்டடங்களின் இருண்ட நிழலிலிருந்து இரண்டு வெண்புரவிகள் வெளிப்பட்டு வந்தன.

அவற்றின் மீது இரண்டு வீரர்கள் காணப்பட்டார்கள். ஒருவர் நடுப்பிராயத்தினர்; இன்னொருவர் வாலிபர். இருவரும் பெரிய முண்டாசு கட்டியிருந்தார்கள்.

இரண்டு குதிரைகளும் இராஜ விஹாரத்தை நெருங்கி வந்தன. வீரர்களில் பெரியவன், ''புத்தம் சரணம் கச்சாமி!'' என்றான். இளம் பிக்ஷு, ''தர்மம் சரணம் கச்சாமி!'' என்றார்.

''அடிகளே! இரவு இரண்டாம் ஜாமத்துக்கு மேல் யாரும் வெளியில் கிளம்பக் கூடாது என்று தெரியுமோ?'' என்றான் முதிய வீரன்.

''தெரியும்; ஆனால் சந்நியாசிக்கும் அந்தக் கட்டளை உண்டு என்பது தெரியாது'' என்றார் பிக்ஷு.

''இந்த அர்த்தராத்திரியில் எங்கே கிளம்பினீர்களோ?''

''இந்தப் பிள்ளை—என்னுடைய சிஷ்யன். காஞ்சிக்குப் புதியவன். காணாமற் போய் விட்டான். அவனைத் தேடிப் பிடித்து அழைத்து வந்தேன்.''

''இந்த வாலிபனுக்கு எந்த ஊரோ?''

''சோழ நாட்டில் செங்காட்டங்குடி.''

''இன்றைக்குத்தான் இருவரும் வந்தீர்களாக்கும்!''

''ஆம், ஐயா!''

''தங்கள் திருநாமம் என்னவோ!''

''நாக நந்தி என்பார்கள்.''

''இனிமேல் நள்ளிரவில் கிளம்ப வேண்டாம், சுவாமி! சிஷ்யப் பிள்ளையிடமும் சொல்லி வையுங்கள்.''

வீரர்கள் குதிரைகளைத் தட்டி விட்டுக் கொண்டு போன பிறகு மூவரும் இராஜ விஹாரத்துக்குள் பிரவேசித்தார்கள். அவர்கள் உள்ளே நுழைந்ததும் இராஜ விஹாரத்தின் வெளிக் கதவு சாத்தப்பட்டது.

உள்ளே வெகு தூரத்தில் கர்ப்பக்கிருஹம் தீப வரிசைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்ததைப் பரஞ்சோதி பிரமிப்புடன் பார்த்துக் கொண்டு நின்றான்.

உள்ளேயிருந்து வந்து கொண்டிருந்த அகிற் புகையின் வாசனை அவனுடைய தலையைக் கிறுகிறுக்கச் செய்தது.

புத்த பிக்ஷு அவனுடைய தலையைத் தொட்டு, ''பிள்ளாய்! எப்பேர்ப்பட்ட ஆபத்து உனக்கு வந்தது! புத்த பகவானுடைய கருணையினால் தப்பினாய்!'' என்றார்.

பரஞ்சோதி அவரை ஏறிட்டுப் பார்த்து, ''அடிகளே! எந்த ஆபத்தைச் சொல்லுகிறீர்கள்? சிறையில் அடைபட்டிருந்ததையா?'' என்று கேட்டான்.

''அதுவுந்தான். அதற்கு மேலே பெரிய ஆபத்து! இந்த விஹாரத்தின் வாசலிலேயே வந்தது. குதிரைமேல் வந்தவர்கள் யார் தெரியுமா?''

''எனக்கு எப்படித் தெரியும், சுவாமி? காஞ்சிக்கு நான் புதிதாயிற்றே?''

பிக்ஷு பரஞ்சோதியின் காதோடு, ''மகேந்திர சக்கரவர்த்தியும், அவருடைய மகன் மாமல்ல நரசிம்மனுந்தான்!'' என்றார்.

பரஞ்சோதிக்கு உண்மையிலேயே தூக்கி வாரிப்போட்டது.

''நிஜமாகவா?'' என்று வியப்புடன் கேட்டான்.

''ஆம்! இருவரும் மாறுவேடம் பூண்டு நகர் சுற்றக் கிளம்பியிருக்கிறார்கள். வேஷம் தரிப்பதில் மகேந்திர பல்லவருக்கு இணையானவர் இந்தப் பரத கண்டத்திலேயே இல்லை.''

பரஞ்சோதி சிறிது நேரம் ஆச்சரியக் கடலில் மூழ்கியிருந்து விட்டு, ''அவர்களால் எனக்கு என்ன ஆபத்து?'' என்று கேட்டான்.

புத்த பிக்ஷு ஒரு கேலிச் சிரிப்புச் சிரித்

தார். "என்ன ஆபத்து என்றா கேட்கிறாய்? யானை மீது வேல் எறிந்த பிள்ளை நீதான் என்று அவர்களுக்குத் தெரிந்தால் நீ பிழைப்பது துர்லபம். அந்தச் சக்கரவர்த்தி குமாரன் இருக்கிறானே, அவன் எப்பேர்ப்பட்டவன் தெரியுமா? இந்தப் பூமண்டலத்தில் தன்னை விடப் பலசாலியோ, வீரனோ ஒருவனும் இருக்கக் கூடாது என்பது அவனுடைய எண்ணம். அப்படி யாராவது இருந்தால் அவனுடன் மல்யுத்தம் செய்து தோல்வி யடைய வேண்டும்; இல்லாவிடில், யமனுலகம் போக வேண்டியதுதான்!"

"சண்டை என்று வந்தால் நான் பின் வாங்க மாட்டேன் அடிகளே! சக்கரவர்த்தி குமாரனாகவே இருக்கட்டும்! யாராய்த்தான் இருக்கட்டும்!" என்றான் பரஞ்சோதி.

"தெரியும் தம்பி! நீ இப்படிப்பட்ட வீரனாயிருப்பதனாலே தான் உனக்கு ஆபத்து அதிகம்; நீ வேலை எறிந்ததனாலேதான் கோயில் யானைக்கு மதம் பிடித்தது என்று பொய்க் குற்றம் சாட்டி உன்னைத் தண்டித்து



விடுவார்கள்.

பரஞ்சோதிக்கு நெஞ்சில் 'சுருக்' கென்றது. சுமைதாங்கியில் படுத்திருந்த போது யாரோ பேசிக்கொண்டு போனது ஞாபகம் வந்தது. நாகநந்தியின் வார்த்தைகளில் இது வரை நம்பிக்கையில்லாதவனுக்கு இப்போது கொஞ்சம் நம்பிக்கை உண்டாயிற்று.



''அப்படிப்பட்ட அநியாயமும் உண்டா?'' என்றான்.

''பரஞ்சோதி! இந்தக் காஞ்சி பல்லவர்களின் குலத்தொழிலே அதுதான். இன்றைக்கு நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னால் உன்னைப் போலவே கல்வி பயில்வதற்காக **மயூரசன்மன்** என்னும் இளைஞன் இந்த நகருக்கு வந்தான். அவனுடைய வீரத்தைக் கண்டு அசூயை கொண்ட பல்லவ இராஜ குமாரன் அவன்மேல் பொய்க் குற்றம் சாட்டிச் சிறையில் அடைத்துவிட்டான்....'

''அப்புறம்?''

''மயூர சன்மன் சிறையிலிருந்து தப்பிக் கொண்டு போய்க் கிருஷ்ணா நதிக்கரையில் தனி ராஜ்யம் ஸ்தாபித்துக் கொண்டு, பல்லவர்களைப் பழிக்குப் பழி வாங்கினான். புத்த பகவான் அருளால் மயூர சன்மனைப் போலவே நீயும் பெரும் ஆபத்திலிருந்து தப்பினாய்!.....''

பரஞ்சோதி அப்போது குறுக்கிட்டு, ''அடிகளே! மற்ற ஆபத்துக்கள் ஒருபுறமிருக்கட்டும். இப்போது எனக்குப் பசி என்கிற ஆபத்துத்தான் பெரிய ஆபத்தாயிருக்கிறது! பசியினாலேயே பிராணன் போய்விடும் போலிருக்கிறது!'' என்றான்.

நாகநந்தி அவனை மடப்பள்ளிக்கு அழைத்துச் சென்று உணவு அருந்துவித்தார். பிறகு ஒரு மண்டபத்தின் தாழ்வாரத்துக்கு அவனை அழைத்து வந்து, ''பரஞ்சோதி இங்கே படுத்துக்கொள். தூங்குவதற்கு ஒரு முகூர்த்த காலம் கொடுக்கிறேன். நிம்மதியாகத் தூங்கு. உனக்கு வந்த ஆபத்து இன்னும் முழுவதும் நீங்கிவிடவில்லை. பொழுது விடிவதற்குள்ளே நாம் கோட்டையைவிட்டுப் போய்விட வேண்டும்'' என்றார்.

பரஞ்சோதி அப்படியே அந்த மண்டபத்தின் தளத்தில் சாய்ந்தான். அடுத்த நிமிஷமே நித்திராதேவி அவனை ஆட்கொண்டாள்.

## பத்தாம் அத்தியாயம்

# கண்கட்டு மாயம்

பரஞ்சோதி தரையில் படுத்தவுடனே கண்ணயர்ந்தான். ஆயினும், அவன் நல்ல தூக்கம் தூங்கினான் என்று சொல்வதற்கில்லை. ஏதேதோ பயங்கர துர்க் கனவுகள் தோன்றித் தூக்கத்தைக் கெடுத்தன.

ஒரு சமயம் ஐந்தாறு புத்த பிக்ஷுக்கள் வந்து அவனைச் சூழ்ந்து நின்றார்கள். அவர்களில் ஒருவர் தம் கையிலிருந்த தீபத்தைத் தூக்கிப் பரஞ்சோதியின் முகத்தில் வெளிச்சம் விழும்படி பிடித்தார்.

''ஆமாம்! நாகநந்தி சொல்வது சரிதான். இவன் முகத்தில் அபூர்வமான களையிருக்கிறது. இவன் மகாவீரன் ஆவான்! அல்லது மகாத்மா ஆவான்!'' என்று யாரோ ஒருவர் சொன்னது போலிருந்தது.

இன்னொரு சமயம் அவனை ஒரு மத யானை துரத்திக் கொண்டு வருகிறது. பரஞ்சோதி சட்டென்று ஒரு பன்னீர் மரத்தின் மேல் ஏறிக்கொள்கிறான். புஷ்பக் கொத்துடன் கூடிய ஒரு பன்னீர்க் கிளையை ஒடித்து யானையின்மேல் போடுகிறான். அச்சமயம் திடீரென்று இரு குதிரை வீரர்கள் தோன்றி, ''அடப் பாவி! கோயில் யானையைக் கொன்று விட்டாயா?'' என்று கூவிக் கொண்டே தங்கள் கையிலிருந்த வேல்களை அவன் மீது எறிகிறார்கள்!

மற்றும் ஒரு பயங்கரக் கனவு! நாகநந்தியடிகள் வந்து அவன் பக்கத்தில் நின்று அவனுடைய முகத்தை உற்றுப் பார்க்கிறார். அப்படிப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவருடைய முகமானது படமெடுத்தாடும் பாம்பின் முகமாக மாறுகிறது! அந்தப் பாம்பு அதனுடைய மெல்லிய பிளவு பட்ட நாவைநீட்டி அவனுடைய முகத்தைத் தீண்ட வருகிறது!

பரஞ்சோதி அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருந்தான். பார்த்தால், நாகநந்தி அடிகள் உண்மையாகவே அவன் அருகில் நின்று அவனைக் குனிந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

''பிள்ளாய்! ஏன் இப்படிப் பயப்படுறாய்? ஏதாவது துர்க்கனவு கண்டாயா?'' என்று பிக்ஷு கேட்டார்.

பரஞ்சோதி, ''இல்லை; இல்லை, ஒன்றுமில்லை. நீங்கள் திடீரென்று தொடவே கொஞ்சம் திடுக்கிட்டேன்'' என்றான்.

''பொழுது விடிய இன்னும் ஒரு முகூர்த்தந்தான் இருக்கிறது. புறப்படு, போகலாம்! பொழுது விடிவதற்குள் இந்தக் கோட்டையைக் கடந்து போய்விட வேண்டும்.''

''ஏன் சுவாமி?''

''புத்த தேவருடைய ஆக்ஞை!''

''யாருக்கு?''

''எனக்குத்தான், உன்னை அபாயத்திலிருந்து தப்புவிக்கும்படி ஆக்ஞை. என்னிடம் உனக்கு இன்னும் நம்பிக்கை வர

வில்லையா?' என்று நாகநந்தி பரிவு ததும்பிய குரலில் கேட்டார்.

பரஞ்சோதி மௌனமாயிருந்தான்.

''போகட்டும்; இன்னும் ஒரே ஒரு முகூர்த்த காலம் — இரவு கழிந்து பொழுது விடியும்வரையில் — நான் சொல்கிறதைக் கேள். புத்த தேவருடைய கட்டளையை நான் நிறைவேற்றிவிடுகிறேன். கோட்டைக்கு வெளியே உன்னைக் கொண்டு போய் விட்டு விடுகிறேன். அப்புறம் உன் இஷ்டம் போல் செய்.''

கனிந்த குரலில் கூறிய இந்த வேண்டுகோளைப் பரஞ்சோதியினால் மறுக்க முடியவில்லை.

''ஆகட்டும், அடிகளே!'' என்றான்.

''அப்படியானால் இன்னும் ஒரு முகூர்த்த காலம் என்னிடம் நம்பிக்கை வைத்து நான் சொன்னபடி கேட்பாயல்லவா!''

''கேட்கிறேன்.''

''உன்னுடைய கண்களைக் கட்டி இவ்விடமிருந்து அழைத்துப் போக வேண்டியதாயிருந்தால்?''

பரஞ்சோதி ஒரு நிமிஷம் திகைத்து நின்றுவிட்டு, ''எப்படியானாலும் சரி!'' என்றான்.

உடனே, நாகநந்தி அடிகள் ஒரு சிறு துண்டை எடுத்துப் பரஞ்சோதியின் கண்களைச் சுற்றிக் கட்டினார்.

''பிள்ளாய்! என் கையைப் பிடித்துக் கொண்டே வர வேண்டும். நான் சொல்கிற வரையில் கண்ணின் கட்டை அவிழ்க்கக் கூடாது. இப்போது நீ என்னிடம் காட்டும் நம்பிக்கையின் பலனை ஒருநாள் அவசியம் தெரிந்து கொள்வாய்!''

இவ்விதம் கூறிப் பரஞ்சோதியின் கரத்தைப் பிடித்துக் கொண்டு, நாகநந்தி நடக்கத் தொடங்கினார். பரஞ்சோதியின் நெஞ்சு 'படக் படக்' என்று அடித்துக் கொண்டது. ஆயினும், அவன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பிக்ஷுவைப் பின் பற்றி நடந்தான்.

முதலில், புத்த விஹாரத்தின் வாசல் வழியாக வெளியேறுவது போலப் பரஞ்சோதிக்குத் தோன்றிற்று. பின்னர், வீதியோடு நடந்து போவதாகத் தோன்றிற்று. பன்னீர் புஷ்பங்களின் வாசனையிலிருந்து அன்று முன்னிரவில் மேல் மாடத்திலிருந்து வீதியில் இறங்கிய இடமாக இருக்கலாமென்று ஊகித்துக் கொண்டான்.

இன்னும் சிறிது தூரம் நடந்த பிறகு, போகும் திசை மாறியது. சற்று நேரத்துக்கெல்லாம் மீண்டும் பன்னீர்ப் பூவின் நறுமணம். ''வந்த வழியே திரும்பிப் போகிறோமா, என்ன? ஆ! இந்தப் பொல்லாத



## அருள்வாக்கு

''கபாலின்! பிக்ஷோ! மே ஹ்ருதயகபிம் அத்யந்த சபலம்
த்ருடம் பக்த்யா பத்த்வாசிவ,
பவத் அதீனம் குரு விபோ!''

என்று ஆசார்யாள் சிவானந்தலஹரியில் கூறுகின்றார்.

'ஹ்ருதய கபிம் அத்யந்த சபலம்' என்று ஆசார்யாள் சொல்கிறபடி, மகா சபலத்துடன் தாவிக் கொண்டேயிருக்கிற மனக் குரங்கை ஈச்வரன் கட்டி வைத்து, முதலில் அது கயிற்றின் நீளத்துக்குத் தாவுகிற மாதிரி விட்டுப் பிடித்தாலும் அப்புறம் அது அவன் ஆட்டினால்தான் ஆடுவது என்று குரங்காட்டியின் குரங்கு மாதிரிச் சும்மா இருக்கிறபடி செய்து விடுவான். மனஸ் இப்படித் துளிக் கூடத் தானாக நகராத போது, அதை அவனும் ஆட்டி வைக்கா விட்டால், அதுதான் மனமே அழிந்து போய் ஆத்மா மட்டும் பிரகாசிக்கிற அத்வைத ஸித்தியான மோக்ஷம். இப்படிப்பட்ட அத்வைதத்தைத் தருவதும் பரமாத்மாவின் கையில்தான் இருக்கிறது என்கிற மாதிரி இங்கே கயிற்றை அவன் கையிலேயே கொடுத்திருக்கிறார். இந்த ச்லோகம் பக்திப் பிரார்த்தனையாக இருக்கும் போதே அதற்குப் பலனாகப் பரமாத்மா ஞான மோக்ஷத்தைக் கொடுக்கவும் செய்யலாம் என்கிற அபிப்பிராயத்தைக் கொடுக்கிறது.

எதற்கும் முதலிலே வழியாக இருப்பது பக்திதான். அதனால் ஆசார்யாள் சொல்லிக் கொடுக்கிற மாதிரியே — நாம் இப்போதுள்ள ஸ்திதியில் — ''இந்த என் மனக்குரங்கைப் பக்தி என்ற கயிற்றால் திடமாகக் கட்டி, உன் ஆதீனத்தில் வைத்துக் கொள்ளப்பா'' என்று பரமாத்மாவிடம் பிரார்த்தனை செய்வோம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

பிக்ஷு எனக்கு வழி அடையாளம் தெரியா மலிருப்பதற்காக இப்படி இழுத்தடிக்கிறார் போலும்!'' என்று பரஞ்சோதி எண்ணிக் கொண்டான்.

மறுபடியும் ஒரு கட்டடத்துக்குள் பிரவே சிப்பது போலிருந்தது. அகிற் புகையின் மணத்திலிருந்து, 'இது இராஜ விஹாரந் தான்' என்று பரஞ்சோதி தீர்மானித்தான். பிறகு சிறிது நேரம் இருளடைந்த குகைகளின் வழியாகச் சுற்றிச் சுற்றி வருவது போல் தோன்றியது. கண்ணைக் கட்டியிருந்தபடி யால், வெகு நேரம் முடிவேயில்லாமல் நடந்து கொண்டிருப்பதாகப் பட்டது.

''அடிகளே! இன்னும் எத்தனை நேரம் இவ்விதம் கண்கட்டு வித்தை செய்ய வேண் டும்?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''பிள்ளாய்! கிட்டத் தட்ட வந்துவிட் டோம். இன்னும் கொஞ்சம் பொறு!'' என்றார் பிக்ஷு.

பிறகு குறுகலான படிகளின் வழியாகக் கீழே இறங்கிப் போவது போல் தோன்றியது. அப்பரம் கொஞ்ச நேரம் சமதரையில் நடை.

திடீரென்று இருட்டிலிருந்து வெளிச்சத்துக்கு வந்து விட்டதாகப் பரஞ்சோதி உணர்ந்தான்.

''பரஞ்சோதி! நாம் வர வேண்டிய இடத்துக்கு வந்து விட்டோம். கண்கட்டுச் சோதனை முடிந்தது'' என்று சொல்லிக் கொண்டே அடிகள் கட்டை அவிழ்த்தார்.

புத்தபகவான் அருளால் சொர்க்கலோகத் துக்கே வந்து விட்டோமோ என்று பரஞ்சோதிக்குத் தோன்றியது. அவன் கண் முன்னால் அத்தகைய சௌந்தர்யக் காட்சி தென்பட்டது.

அகழி நீரில் அஸ்தமன சந்திரனின் வெள்ளிக்கிரணங்கள் படிந்து, உருக்கிய வெள்ளி ஓடையாகச் செய்து கொண்டிருந் தன. அகழிக்கப்பால் மரங்கள் அடர்ந்த வனப்பிரதேசம் காணப்பட்டது. மரங்களின் உச்சியில் சந்திர கிரணங்கள் இலைகளின் மீது தவழ்ந்து விளையாடின.

அகழியில் ஒரு படகு மிதந்தது. பரஞ் சோதியைச் சிறை மீட்க உதவி செய்த இளம் பிக்ஷு கையில் துடுப்புடன் படகில் நின்றார்.

பெரிய பிக்ஷுவும் பரஞ்சோதியும் அகழி யண்டை போய்ப் படகில் ஏறினார்கள். படகு நகர்ந்தது.

''இந்த அகழியைத் தாண்டப் படகு என்னத்திற்கு? எளிதில் நீந்திக் கடந்து விட லாமே?'' என்றான் பரஞ்சோதி.

''ஆம்; நீந்தத் தெரிந்தவர்கள் நீந்தலாம்.''

''இந்த அகழியினால் கோட்டைப் பாது காப்புக்குத்தான் என்ன பிரயோஜனம்? எதிரிகள் வந்தால் சுலபமாய் நீந்திவிட மாட் டார்களா?''

''அதோ பார்!'' என்றார் பிக்ஷு. சற்றுத் தூரத்தில் ஒரு முதலை பயங்கரமாக வாயைத் திறந்தது.

''ஐயோ!'' என்றான் பரஞ்சோதி.

''இம்மாதிரி நூற்றுக்கணக்கான முதலை கள் இந்த அகழியில் இருக்கின்றன. சாதா ரண காலங்களில் அங்கங்கே இரும்புக் கூண்டுகளில் அடைத்து வைத்திருப்பார்கள். யுத்த காலங்களில் திறந்து விட்டுவிடுவார் கள். நேற்று இரவு திறந்து விட்டிருக்கிறார் கள்.''

''அப்படியானால், யுத்தம் வருவது நிஜந் தானா, சுவாமி!''

''பின் எதற்காக இவ்வளவு அமர்க்கள மெல்லாம் என்று நினைத்தாய்!'' என்றார் பிக்ஷு.

பரஞ்சோதி மௌனமாயிருந்தான்.

படகு அகழியின் அக்கரையை அடைந் தது.

(தொடரும்)

## பாஸ்வானைப் பிரதமராக்குவீர்களா?

ராஜ்ய சபாவில் பிரதமர் வி. பி. சிங் பின்தங்கிய வகுப்பினரின் முன்னேற்றத் தின் அவசியத்தைப் பற்றியும் அவர் களுக்கு உயர் பதவிகள் அளிக்கப்பட வேண்டும் என்பதைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்த போது காங்கிரஸைச் சேர்ந்தசரோஜ்கபர்டே ''அப்படியானால் முதலில் ராம் விலாஸ் பாஸ்வா னுக்குப் பிரதம மந்திரி பதவி தந்து உங்கள் வாக்குறுதியை நிறைவேற்றுங் கள்'' என்று கூற, வி. பி. சிங் அதற்குப் புன்னகை புரிய, தர்மசங்கடத்துடன் பாஸ்வான் நெளிந்தார். ஆனால் ஜனதா தளத்தைச் சேர்ந்த ராம் அவதேஷ் சிங், ''ராஜீவ்காந்தியைவிலக்கிவிட்டுச் சிவசங் கரை உங்கள் தலைவராக்குங்கள். அதற்குப் பிறகு நாங்கள் யோசிக்கி றோம்'' என்று ஒரு போடு போட்டார்!



ஆதாரம்: ஹிந்து.

தகவல்: ஜி. இந்திரா.

# சிவாஜி, இதுவரை நடிக்காத கேரக்டர்

"அன்புள்ள சுப்புராஜாவுக்கு மதுரையிலிருந்து உறங்காப்புலி எழுதறேன். இங்கே ஸ்ரீவித்யா அம்மா 'என் ராசாவின் மனசிலே' பட ஷூட்டிங்கில் தூள் கிளப்புது. அச்சடிச்ச மாதிரி அப்படியே அறுபது வயசுக் கிழவிதான். எப்படிங்கிறியா? அந்த அம்மாவுக்கு மட்டும் இரண்டு மணி நேரம் ஸ்பெசலா மேக்கப் நடக்குது. இந்த மேக்கப் போட்டுக்கிட்ட நாலு மணி நேரம்தான் நடிக்க முடியும். அதுக்கு மேலே அப்படியே நெய் மாதிரி உருகித் தோல் சுருக்கமெல்லாம் விலகி உதிர்த்துவிடும்! அதனாலே தினமும் அரை நாள்தான் ஷூட்டிங்! அப்புறம் அந்தம்மா ரெஸ்ட் எடுப்பாங்கன்றியா? அதான் இல்லே... அந்தக் கிராமத்துலே இருக்கிற கிழவிங்களை உத்துப் பாத்துப் பேசிப் பழகி 'கேரக்டர் ஸ்டடி' பண்றாங்க... சரி, மெட்ராஸ்ல மழை சீசன் துவங்கிடுச்சா...?"

அன்புள்ள அண்ணாத்தைக்கு, உங்க சுப்புராஜா எழுதறேன். மெட்ராஸ்ல மழை சீசன் தொடங்கிடுச்சான்னு கேட்டு எழுதியிருக்கீங்க.

இங்கன பாலசந்தர் சாரோட சிஷ்யப் புள்ளைங்க காட்டிலேதான் செம மழை! சுரேஷ் கிருஷ்ணாவுக்குத் தெலுங்கில நந்தி அவார்டு கிடைச்சிருக்கு. வஸந்த் தம்பி படு பிஸியாயிட்டுது. பாலசந்தர் சார்கிட்டே பன்னெண்டு படங்களுக்கு உதவி டைரக்டரா இருந்து வந்த கண்ணதாசன் மவன் கண்மணி சுப்பு ரொம்ப நாளாவே சான்ஸ் இல்லாம இருந்தாரே... இப்ப அவருக்கும் 'சித்திரைப் பூக்கள்' படத்தை டைரக்ட் செய்ய சான்ஸ் அடிச்சிருக்கு. இந்தப் படத்துக்கு ஹீரோயின் செலக்ஷன் எப்படித் தெரியுமா? பழைய படங்கள்ல தம்மாத்தூண்டு தம்மாத்தூண்டா இருந்த பேபி ஸ்டாருங்க இப்ப எப்படியிருக்காங்கன்னு போய்ப் பார்த்தாரு கண்மணி சுப்பு. அப்போ, 'மண்ணுக்குள் வைரம்' படத்துல வந்துச்சே ஒரு கொழந்தே... விநோதினி... இப்போ பார்த்ததும் ஹீரோயினாப் புக் பண்ணிட்டாரு மனுஷன்!

நிற்க. உங்க யூனிட் எப்ப அண்ணாத்தே பொறப்படப் போவுது? என்னதான் கடிதாக போட்டுக்கிட்டாலும் உங்க குரலை நேர்ல கேட்கிற மாதிரி இல்லே...

ஆங்... குரல்னு சொன்னதும் இன்னொண்ணு ஞாபகத்துக்கு வருது. 'முதல்



• விநோதினி

குரல்'ன்னு ஒரு படம். வி. சி. குகநாதன்தான் எடுக்கிறார். சிவாஜியண்ணன் நடிக்கிறார். எங்கே சிவாஜி, 'அட எல்லாக் கேரக்டரையும் நடிச்சாச்சப்பா'ன்னு சொல்லி ஒதுக்கிடுவாரோன்னு யோசிச்சு; 'அண்ணே, இது வரைக்கும் நீங்க நடிக்காத பத்திரிகையாளர் கேரக்டர்'ன்னு குகநாதன் சொன்னதும் அவரும் ஒப்புத்துக்கிட்டார். எங்கே தன்னைக் கண்டு நர்வஸ் ஆயிடுவாங்களோன்னு யூனிட்ல இருக்கிற அத்தனை பேரையும் தட்டிக் குடுத்து குஷிப்படுத்தறார் சிவாஜியண்ணன்!

முடிச்சுக்கட்டுமா? மத்ததையெல்லாம் நேர்ல பேசுவோம்......



• இதுவரை நடிக்காத கேரக்டர்.

தொகுப்பு: **எஸ். பாலு.**

# கடைசிப் பெண்ணுக்குப்

"மாப்பிள்ளே! நான் சொல்றேன்னு நீங்க தப்பா நினைச்சுக்கப்படாது...!''

— தம் கடைசி மகளின் திருமண அழைப்பிதழைத் தாம்பூலத் தட்டில் வைத்த கையோடு மாமனார் இப்படிப் பீடிகையோடு ஆரம்பிக்கவே சற்றே குழம்பினான் முரளி.

''என்ன மாமா... எதுன்னாலும் தைரியமாச் சொல்லுங்க...!''

''எனக்கு நீங்க ஒரு உபகாரம் செய்யணும்!''

''உபகாரமா...?''

''ஆமாம்... அதைக் கேட்டா நீங்க தப்பா நினைக்க மாட்டீங்களே...?''

''மாட்டேன். தைரியமாச் சொல்லுங்க. எதுன்னாலும் என்னால முடிஞ்சதைச் செய்யறேன்...!''

''அதுக்காக என் பொண்ணுகிட்டே கோவிச்சுக்க மாட்டீங்களே...?''

''உங்க மேலே சத்தியமா மாட்டேன், போதுமா மாமா? என் நிலைமை இன்னமும் புரியாம பீடிகை போட்டுட்டேயிருக்கீங்களே...! விஷயத்தைச் சொல்லுங்க!''

''இல்லே, மனுஷனாப் பொறக்கிற ஒவ்வொருத்தனுக்கும்தான் ஆயிரத்தெட்டுக் கஷ்டம்.. அதுல என் 'கஷ்டம்' என்னான்னு உங்களுக்குத் தெரியாததில்லே...!''

''ஆமாம்... ஏற்கெனவே கடன் வாங்கித்தான் மூணு பொண்ணுக கல்யாணத்தை முடிச்சீங்க. இப்பவும் இருக்கிற வீட்டு மேலேதான் கடனை வாங்கிக் கடைசிப் பொண்ணுக்கும் கல்யாணம் வச்சிருக்கீங்க... பத்தாக்குறைக்கு வெளியிலயும் 'அங்கே, இங்கே'ன்னும் பிடுங்கிப் போட்டிருக்கீங்க... அதுக்கு என்ன இப்ப...?''

''சரியாச் சொன்னீங்க மாப்பிள்ளே... அப்படிக் கடனை வாங்கிப் போட்டும் இப்ப செலவுக கட்டுக்கடங்காம இழுபறியாயிருக்கு. அதுதான் ரொம்பவும் யோசிக்க வேண்டியதாப் போச்சு!'' என்று இழுத்தார் மாமனார்.

மாமனார் ஏதாவது ஆயிரம், ஐயாயிரம் என்று தன்னிடம் கடன் கேட்கத்தான் இப்படியொரு பீடிகை போடுகிறாரோ? முரளி உடனே பயந்து போனான். இங்கேயே அவன்வனுக்கு ஆயிரத்தெட்டுப் பிரச்னை!

''என்ன.. ஏதாவது பணப் பிரச்னையா? இங்கேயும் அதுதானே பிரச்னை மாமா... அதனால தயவு செஞ்சு என்கிட்டே இப்ப எதுவும் அது சம்பந்தமாக் கேட்டுடாதீங்க... இப்போதைக்கு என்னால சத்தமா எதுவுமே முடியாது...!''

''அடடா... என்ன மாப்பிள்ளை நீங்க! என் கஷ்டம் உணர்ந்த உங்க கஷ்டம் எனக்குத் தெரியாதா? அதுவும் உங்ககிட்டே வந்து 'சடால்'னு பைத்தியக்காரத்தனமா அப்படிக் கடன் கேட்டுடுவேனா நான்..?''

''அப்புறம் உங்களுக்கு என்னதான் பிரச்னை மாமா...?''

''மாப்ளே... அதுதான் இன்னமும் உங்ககிட்டே எப்படிச் சொல்றதுன்னே தயக்கமாயிருக்கு...! இருந்தாலும் சொல்லியாகணுமேன்னு இதைச் சொல்றேன். இப்ப என் சின்னப் பொண்ணு கல்யாணத்துக்கு உங்க குடும்பம் மட்டுமில்லாம, அடுத்தது, அதற்கடுத்த பொண்ணு குடும்பம், பேரன், பேத்திகன்னு நிறைஞ்சு கிடக்கு. அத்தனை குடும்பத்துக்கும் இப்ப ஜவுளி எடுக்கறதானா எப்படியும் அஞ்சாயிரம் ரூபாய்க்கும் மேல ஓடிடும். என் கஷ்ட நிலைமையத்தான் இப்ப நீங்களே சொன்னீங்களே...!''

''சரி... அதுக்கு நான் என்ன செய்யட்டும்? அதைச் சொல்லுங்க முதல்லே...!''

''இல்லே... போன பொண்ணுக கல்யாணங்களுக்குச் செய்த அளவுக்கு உங்களுக்கு சீர் சிறப்புச் செய்ய இப்ப என்னால முடியாது. பொண்ணு மாப்பிள்ளையைத் தவிர யாருக்கும் ஜவுளி எடுக்கறதில்லைன்னு முடிவு செய்துட்டேன். உங்க குடும்பத்துக்கு மட்டும் ஜவுளி எடுக்கறதுன்னாக் கூட ரூபாய் ஆயிரத்தைத் தாண்டிடும். அதுதான்... அதைத் தவிர்த்துட்டா என்னனு...!'' இழுத்தார் மாமனார்.

''அதனால என்ன மாமா... அப்படியே செய்துட்டாப் போச்சு... இதுல எனக்கு எந்த ஆட்சேபணையும் இல்லே...!'' முகத்தில் எந்தவிதமான சலனமுமில்லாது பதில் சொன்னான் முரளி.

''இல்லே மாப்பிள்ளே, என் பொண்ணு, அதுதான் உங்க பெண்டாட்டி... இந்த விஷயத்தைச் சொன்னவுடனே ஒப்புக்க மாட்டேங்கறா! ஊருக்குள்ளே நாலு பேர் கேவலமாப் பேசுவாங்கன்னு ஒப்பாரியே வைக்கிறா! தங்கச்சி கல்யாணத்துக்கு ஒரு புதுத் துணி கூட எங்களுக்கு எடுத்துத் தரலைன்னா அந்தக் கல்யாணத்துக்கே வர மாட்டேன்னு பிடிவாதம் பிடிக்கிறா...!''

''அவளுக்கு நம்ம மாதிரி மனுஷனோட கஷ்டம் என்ன தெரியும்மாமா...? அவளைச் சமாதானப்படுத்திக் கல்யாணத்துக்குக் கூட்டிக்கிட்டு வர்றதுக்கு நானாச்சு...

கா. சு. வேலாயுதன்

# கல்யாணம்

போதுமா...?''

''அது போதும் மாப்பிள்ளே...! இருந்தாலும் எம் மனசு ஏனோ சங்கடப்படுது. உங்களுக்கெல்லாம் இப்படிச் சின்னதா ஒரு சீர் சிறப்புக் கூடச் செய்யாம அப்படி என்ன கல்யாணம்ன்னு...! ஊர் உலகம் இதைப் பார்த்து என்னவெல்லாம் பேசுமோன்னு...! மாப்பிள்ளே...எது எப்படியோ போகட்டும்! உங்களுக்கு ஆட்சேபணையில்லேன்னா, கல்யாணம் முடிஞ்சவுடனே இந்தச் 'சீர் வரிசையை' உங்களுக்குச் செய்ய முயற்சி செய்யறேன்:..!''

''அதை அப்புறமாப் பார்த்துக்கலாம் மாமா...!''

''ஐயோ என் மாப்பிள்ளைன்னா மாப்பிள்ளைதான்! என் கஷ்ட நஷ்டம் புரிஞ்சுக்காத மகன்க மத்தியில உங்க மாதிரி ஒரு மாப்பிள்ளை எனக்குக் கிடைச்சதுக்கு ஒரு கோயில் கட்டிக் கும்பிடணும்.. அப்ப நா வரட்டுமா மாப்பிள்ளே... கல்யாணத்துக்கு அவசியம் வாங்க!''

மாமனார் சந்தோஷத்துடன் எழுந்து கொள்ள, முரளி தயக்கத்துடனே எழுந்து அவர் பின்னே சென்றான்.

''மாமா ஒரு நிமிஷம்!'' — சுற்றும் முற்றும் பார்த்துக்கொண்டே அவரை விளிக்க, மாமனாரோ விழித்தார்.

''என்ன மாப்பிள்ளே...!''

''இல்லே... நேத்து வரைக்கும் இதை உங்ககிட்டே எப்படிச் சொல்றதுன்னுதான் உங்க மாதிரியே நானும் மண்டையப் பிச்சுக்கிட்டு இருந்தேன்...!''

''அப்படியா... எங்கிட்டே இனிமே அப்படி என்ன தயக்கம்? எதுன்னாலும் தைரியமாச் சொல்லுங்க மாப்பிள்ளே!''

''இங்கேயும் எனக்கு ஆயிரத்தெட்டுப் பிரச்னை. ஏகப்பட்ட கஷ்டம் மாமா! பொண்ணுக பையனை இப்பத்தான் ஸ்கூல்ல சேர்த்திருக்கேன். செலவும் அளவுக்கு அதிகமாப் போயிடுச்சு... அப்படி இப்படின்னு இதனால மூணு, நாலாயிரம் கடனும் ஆயிடுச்சு...!''

''ஆமாமாம் குடும்பம்ன்னு இருந்தா இதெல்லாம் இல்லாமலா...? நானும் உங்க பாதையக் கடந்து வந்தவன்தானே! ஆமாம் அதுக்கு நான் என்ன செய்யணும் அதைச் சொல்லுங்க முதல்லே...!''

''இல்லே... உங்க ரெண்டாவது பொண்ணு அஞ்சலிக்குக் கல்யாணப் பிரசண்டேஷனா ஒரு பவுன் மோதிரம் போட்டேன். அடுத்தவ கல்யாணிக்கு ஒரு 'காட்ரேஜ்' பீரோவை பிரசண்ட் பண்ணினோம்... ஆனா இன்னைக்கு நான் இருக்கிற சூழ்நிலையில எதுவுமே செய்ய முடியாம இருக்கேன். நீங்கதான் எதுவும் மனசு சங்கடப்படாம என் சின்ன மச்சினிக்கு விஷயத்தைச் சொல்ற விதமா எடுத்துச் சொல்லிச் சாந்தப்படுத்தணும்.. செய்வீங்களா மாமா...?'' அவர் கைகளை இறுகப் பற்றிக் கொண்டான் முரளி.

மாமனார் உடனே ஏதும் புரியாது திகைத்தாலும் ஒரு நொடியில் சுதாரித்துக்கொண்டு புன்முறுவல் பூத்தார்.






**COUNT DOWN — 19**

# "ஷ்...சத்தம் போடாமல் வா!"

"கர்னல் உள்ளே வாருங்கள். நான் எல்லாவற்றையும் சொல்லி விடுகிறேன்."

துக்கம் நடந்திருக்கும் வீட்டில் ஒலிக்கும் குரல் போல அமீர் ஜவஹரின் குரல் இருந்தது.

கர்னல் அருள்தாஸ் தமது இறுக்கமான முகபாவத்தை மாற்றாமலேயே அந்த அறைக்குள் நாற்காலி மூலம் பிரவேசித்தார்.

அமீர் ஜவஹர் மறுபடி கட்டிலில் அப்பா அருகில் அமர்ந்தான். சலீமின் சுருக்கம் விழுந்த முகத்தை முட்டையைத்தடவுவது போல மென்மையாகத் தடவியபோது, அவன் குரல் அடைத்துக் கொண்டது.

"பாகிஸ்தானில் ஒவ்வொரு முறை மூச்சை உள்ளே இழுத்த போதும், இந்தியாவின் மீது வெறுப்பையும் சேர்த்துத்தான் சுவாசித்தேன். மேஜர் நாஸரைக் கடவுளுக்கு அடுத்த படியாக நினைத்திருந்தேன் — போன நிமிடம் வரை. எவ்வளவு நம்பினேன் அவரை! என்னையும், சாந்தினியையும் அநாதைகள் என்ற உணர்வேயில்லாமல் வளர்த்தார். ஹை கிளாஸ் கல்வி. நல்ல உணவு. யூ நோ ஒன் திங் கர்னல்? எனது பதினாறாவது வயதில் மேஜர் நாஸர் எனக்குத் துப்பாக்கிப் பயிற்சி கொடுத்தார். எவ்வளவு பயிற்சிகள். எவ்வளவு பயிற்சிகள்! சுடுவேன், மாடிகளில் இருந்து குதிப்பேன், ஓடுவேன், சண்டை போடுவேன், கைச் சண்டை, கராத்தே. இது, அது என்று எல்லாப் பயிற்சிகளும் எனக்குக் கொடுக்கப் பட்டன. எதற்காக... கடைசியில் இப்படி பலி ஆடாக வந்து மாட்டிக் கொள்ள... அவர்கள் என்னை ஏமாற்றி விட்டார்கள். அவர்கள் என்னை ஏமாற்றி விட்டார்கள்..."

கர்னல் அருள்தாஸின் நாற்காலி வண்டி மெதுவாக உருண்டு வந்து, அவனை அணுகியது. கர்னல் அவன் தோளைப் பற்றினார்.

"உணர்ச்சிவசப்படாதே அமீர்."

"போதும். எனக்கு இனிமேல் எதுவும் வேண்டாம். என் அப்பாவை இந்த நிலைக்கு ஆளாக்கிய அவர்களுக்காக நான் இனிமேல் உழைக்கப் போவதில்லை. என் அம்மாவை நாசம் செய்தவர்களுக்காக நான் இனிமேல் உதவப்போவதில்லை. நான் எதற்காக என் உயிரைப் பணயம் வைக்க வேண்டும்? எதற்காக இந்தியாவிற்கெதிராக வேலை செய்ய வேண்டும்? எதற்காக இந்த ஸ்பை வேலை. யாரோ, யாரையோ அடித்துக் கொள்ளட்டும். சாகட்டும். ஐ டோண்ட் கேர். ஐ ஜஸ்ட் டோண்ட் கேர்."

"ஆட்டத்திலிருந்து விலகிக் கொள்ளப் போகிறாயா அமீர்?"

"ஆமாம். என்னிடம் பணம் இருக்கிறது. என்னை நம்பி சாந்தினி இருக்கிறாள். இப்போது அப்பாவும். இவர்களோடு நிம்மதியாய் வாழப் போகிறேன்."

"முட்டாள் தனம் ஜவஹர்."

"ஏன்?"

"உன்னை அனுப்பியிருப்பவர்களைப் பற்றி யோசி. உன்னைப் போல ஒரு சிறந்த ஒற்றனை உருவாக்க எவ்வளவு பணம் செலவழித்திருப்பார்கள்? அவர்களுடைய எத்தனை ரகசியங்கள் உனக்குத் தெரியும்! அவற்றோடு நீ ஒதுங்கிக் கொண்டு வாழ முடியுமா? நீ ஒதுங்குகிறேன் என்றால் அவர்கள் சம்மதித்து விடுவார்களா?"

"என்ன செய்து விடுவார்கள் கர்னல்?"

"ரகசிய சர்வீஸின் எழுதப்படாத விதி என்ன தெரியுமா? எப்போது ஒரு ஒற்றன் நமக்கு உபயோகமில்லாதவனாகி விடுகிறானோ, அந்த க்ஷணத்திலிருந்தே அவன் அடுத்த தேசத்திற்கும் உபயோகப் பட்டு விடக் கூடாது. நீ அவர்களிடம் இருந்து விலகி விட்டால், முதுகு ஓட்டை இழந்த ஆமை போல் ஆகிவிடுவாய். உன் கடையில் ஒரு டைனமைட் வெடிக்கலாம். உன் வீட்டில் தீப்பிடிக்கலாம். போக்குவரத்து குறைந்த ஒரு ராத்திரியில், நீ செல்லும் கார் தற்செயலாக ஒரு லாரியால் மோதப்படலாம். நீ உன் அப்பாவையும், சாந்தினியையும் காப்பாற்ற விரும்பினால், முதலில் உன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வது அவசியம். நீ பாகிஸ்தானின் ரகசிய ஒற்றனாகத் தொடர்ந்து இருப்பதைத் தவிர வேறு வழியில்லை..."

"அவர்கள் என் குடும்பத்தைக் கலைத்

**அஞ்சனா மைக்கேல் ராஜ்**

தவர்கள். அவர்களுக்காக நான் எப்படி வேலை செய்ய முடியும்?''

''பாகிஸ்தானின் ஒற்றனாக இருக்க வேண்டும் என்று சொன்னேனே தவிர, உண்மையான ஒற்றனாக இருக்கவேண்டும் என்று சொன்னேனா?''

அமீர் ஜவஹர் சலீமிடமிருந்து எழுந் தான். சக்கரநாற்காலியின் இரு கைகளிலும் கையூன்றிக் கர்னலின் முகத்தை அருகாமை யில் பார்த்தான்.

''இந்தியாவிற்காக — நீ — ஏன் — ரகசிய மாக — உழைக்கக்கூடாது?''

கர்னல் ஒவ்வொரு வார்த்தையாய் நிதான மாய்க் கேட்டார்.

''என்னை டபிள் ஏஜெண்டாக இருக்கச் சொல்கிறீர்களா?''

''யெஸ்.''

அமீர் ஜவஹர் கர்னலைச் சற்று நேரம் ஆழ்ந்து நோக்கினான். திரும்பி சலீமைப் பார்த்தான். சற்று நேர அமைதிக்குப் பின், ''ஒத்துக் கொள்கிறேன்'' என்று ஒரு வார்த் தையில் தன் சம்மதத்தைத் தெரிவித்தான்.

**தி**லக் நகர்.

நான்கு புறமிருந்தும் சாலைகள் கை குலுக்கிக் கொள்ளும் மையத்தில் முகர்ஜி ஸ்வீட் ஹவுஸ். நடைபாதையில் நாற்காலிகள். நாற்காலிகளில் ராட்சஸ பஞ்சாபி அம்மாக் கள். பிரகாசமான சருமத்தோடு இனிப் புகளை ஸ்பூன்களால் விள்ளும் மகன்கள்.

> **பயிற்சி பெற்ற ஒற்றனைத் திறமை யாகப் பொறி வைத்துப் பிடித்துவிட்டால் மட்டும் போதாது. அசைந்து கொடுக்கா மல் இறுக்கமாகப் பூட்டியிருக்கும் அவனு டைய ரகசியச் சுரங்கத்திற்குள் பிரவே சிக்க, சித்திரவதைகளும், வன்முறை களும், அச்சுறுத்தல்களும் மட்டும் போதாது. சுரங்கத்தின் கதவு வலுவா யிருந்தால் எந்த ஜன்னல் அசைந்து கொடுக்கும் என்பதை அறியும் பக்குவ மான புத்திசாலித்தனம்தான் முக்கிய மாகத் தேவை.**
>
> **— ஆன்ட்ரியா தார்வி.**

சாலையோரம் நிற்பது போல் ஏமாற்றி விட்டு விரையும் டில்லி நகராட்சி பஸ் வழி விட்டதும் ரவீந்தர் சாலையில் நுழைந்தது மாருதி வேன். வேனில் பின் சீட்டில் அமீர் ஜவஹர் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு ஒட்டப்பட்டிருந்த தாடியும், வெகு நெருக்க மாக வெட்டிவிடப்பட்டிருந்த தலைமுடியும் சேர்ந்து அவன்தான் அமீர் ஜவஹர் என்று அடையாளம் காண்பதற்குச் சிரமமாக இருந் தது. மேக்கப் போடச் சொன்னது அமீர் ஜவஹர். போட்டது அச்சுதன். போட்டு முடித்ததும் கர்னல் பார்த்துவிட்டு உதிர்த்த வாக்கியம்: ''என்னாலேயே உன்னை அடை யாளம் காணமுடியவில்லை அமீர் ஜவஹர். உன் ஆட்கள் யாராவது உன்னைத் தொடர்



வார்கள் என்று நினைத்தால் அதை மற. அவர்களுக்கு உன்னை நிச்சயம் தெரியாது."

ரவீந்தர் சாலையில்-சற்று தூரம் சென்று 88 ஆம் இலக்கம் கொண்ட வீட்டு வாசலில் சின்னச் சுருதி கொடுத்தது. வீட்டின் உள்ளிருந்து வேட்டி, பனியனோடு, நெற்றியில் சந்தனத்தோடு, உதட்டில் புன்னகையோடு சுற்றுச்சுவர்க்கதவைத் திறந்தவனுக்கு நாற்பத்தைந்து வயது இருக்கலாம்.

மாருதி உள்ளே நுழைந்து நின்றது.

''வெல்கம் டு மை ஸ்மால் ப்ளேஸ்'' என்றான் அச்சுதன்.

அமீர் ஜவஹர் இறங்கி வீட்டை ஏறிட்டான்.

''எந்தா கொச்சு வேலாயுதன்! சுகந்தன்னே?'' என்று சக்கர வண்டியைத் தள்ளிய வேஷ்டி பனியனைப் பார்த்துக் கேட்டார் கர்னல். அவன் பதில் சொல்லாமல் சிரித்துக் கொண்டே சக்கரவண்டியை வீட்டினுள் செலுத்தினான்.

சிறிய ஒற்றை அடுக்கு வீடு. மாடியில் டீ.வி. ஆன்ட்டெனாவின் கூட்டல் குறிகளில் இருந்த காகங்கள் அலகுகளைக் கூராக்கிக் கொண்டிருந்தன. கதவில் குருவாயூரப்பன் அருள் பாலித்தான்.

அச்சுதன் உள்ளே நுழைந்து ''வேலாயுதன்'' என்று குரல் கொடுத்ததும், கூடத்தில் இருந்த ஒயர் நாற்காலிகள் படுக்கையறைக்கு இடம் மாறின.

அமீர் ஜவஹர்., கூடத்திற்கும் படுக்கையறைக்குமாக மாறி மாறி நாற்காலிகளைச் சுமந்து வந்து போட்ட வேலாயுதத்தைப் பார்த்தான். கொஞ்சம் கூட அசட்டுத்தனம் நிறைந்த சிரிப்பு மாறாமல், வேஷ்டி இடறாமல் அவன் வேலையில் ஈடுபட்டது அவனுக்கு ஆச்சரியத்தை அளித்தது.

''என் சமையல்காரன், என் வேலைக்காரன், என் உதவியாளன்'' என்றான் அச்சுதன் முதன்முதலாக அமீர் ஜவஹரின் மொழியில்.

''உங்க மனைவிதான் உங்களை ஓட்டலில் சாப்பிடச் சொல்லிட்டு ஊருக்குப் போயிட்டாங்களே? பின்னே ஏன் சமைக்கிறீங்க?''

''டச் விட்டுடக் கூடாது பாருங்க...''

— பஞ்சவர்ணமகன்.



என்ன பெயர்? கர்னல் என்னவோ விசேஷமாக அழைத்தாரே?''

''கொச்சு வேலாயுதம். கொச்சு என்றால் சிறிய என்று அர்த்தம். என்னுடைய ஸ்வதேசத்தில் இருந்து கூட்டி வந்திருக்கிறேன். இவன் வீட்டுக்குப் பக்கத்தில் இன்னொரு வேலாயுதம் இருந்ததால் இவன் கொச்சு வேலாயுதம் ஆகிவிட்டான். தனி ஆள். கொஞ்சம் மூளைவளர்ச்சி குறைந்தவன். அப்பாவி. எப்போது கேட்டாலும் கல்யாணத்திற்காகப் பணம் சேர்க்கிறேன் என்று சொல்லுவான். கொஞ்சம் வேடிக்கை பார்க்கிறாயா?'' அமீர் ஜவஹர் மறுப்பதற்குள், அச்சுதன், ''கொச்சு வேலாயுதன்'' என்று விளித்தான்.

நாற்காலி ஒன்றைத் தோளுக்கு மேல் தூக்கியிருந்த வேலாயுதம் நின்று திரும்பினான்.

''ஸாரே?''

''வேலாயுதன் எந்தினானு சம்பாதிக்குன்னது?''

வேலாயுதத்தின் முகத்தில் திடீரென அபரிமிதமான லஜ்ஜை. கால்விரல் ஒன்று தரையை அர்த்த சந்திர வட்டமாகக் கீறிப் பார்த்தது.

''எடோ... பறயு...'' என்றான் அச்சுதன்.

''கல்யாணம் கழிக்கான் வேண்டியானு சாரே...''

''ஓஹ்.... அங்ஙனேயோ? எப்போழ் கல்யாணம்?''

''மகரத்திலாணுசாரே கல்யாணம்...''

''மகரம் என்றால்?'' என்று புன்முறுவலுடன் கேட்டான் அமீர் ஜவஹர். வேலாயுதத்தை நினைத்தால் ஒரு பக்கம் சிரிப்பாய் இருந்தது. ஒரு பக்கம் பரிதாபமாய் இருந்தது.

''ஜனவரியில் என்று அர்த்தம். வேலாயுதன், எங்ஙளுக்கு மூணு சாயா.''

''இதோ, ஸாரே'' குனிந்து நாற்காலியை இறக்கி விட்டு ஓடினான் வேலாயுதன். அச்சுதன் கதவை மூடினான்.

கர்னல் அச்சுதனைப் பார்த்தார். முகத்தின் சின்ன அசைவு மூலம் 'கேள்' என்றார்.

''ஜவஹர். நேற்று நாங்கள் உன்னைப் பிடிக்கவில்லை என்று வைத்துக் கொள்வோம். அந்த ஃபோட்டோக்களை என்ன செய்திருப்பாய்?''

''மேலிடத்திற்கு அனுப்பியிருப்பேன்.''

''எப்படி?''

''மணிமாறன் என்று ஒரு ஆள்.''

''கேப்டன் மணிமாறன்?''

''அவனேதான். அவனிடம் கவரைச் சேர்ப்பித்திருப்பேன். அவன் மூலம் யாருக்கும் சந்தேகமில்லாமல் கவர் எல்லை மாறிவிடும்.''

''அதே மணிமாறனை நீ காண்டாக்ட பண்ணு ஜவஹர். நீ மல்ஹோத்ராவிடமிருந்து வாங்கிய போட்டோக்களைக் காண்பி. அவை போலியான ஆயுத



''காப்பியடிச்சு எழுதறதிலேயும் நீங்க பெரிய கில்லாடி ஸார்!''

''எப்படிச் சொல்றீங்க?''

''நான் எழுதின நாவலைச் சிறுகதையாகவும்... சிறுகதையை நாவலாகவும் எழுதிட்டீங்களே!''

— மணியன் தர்மலிங்கம்.

ஆர்டர்கள் என்று அவனுக்குப் புரியப்போவதில்லை. ஆனால் போட்டோக்களை அவனிடம் கொடுக்காதே. நீயே நேரில் போய் ஒப்படைக்க வேண்டும் என்று சொல். காரணம் கேட்பான். போட்டோ எடுக்க அவகாசமில்லாத இன்னொரு முக்கியமான பேப்பரை நீ பார்த்ததாகச் சொல். அதை அப்படியே மனத்தில் பதித்து வைத்திருப்பதாகச் சொல். பாகிஸ்தானில் உன் அதிகாரிகளிடம் நேரடியாகச் சொல்ல வேண்டிய அளவு முக்கியமானது என்று சொல். கேப்டன் மணிமாறன் எல்லைப் புறத்தில் இருப்பதால் அவனே உன்னை பாகிஸ்தானிற்குள் அனுப்பிவிடுவான்.''

அமீர் ஜவஹர் கேள்வியின்றி, அச்சுதனைப் பார்த்தான். கதவில் விரல் முட்டி குட்டியது. ''சாரே... சாயா.''

கதவு திறந்து தேநீர்க் கோப்பைகளை எடுத்துக் கொண்டதும் மறுபடி கதவைச் சாத்தினான் அச்சுதன்.

''பாகிஸ்தானில் உனக்கு ஒரு வேலை இருக்கிறது ஜவஹர்.''

''உங்களுக்கு நான் அங்கிருந்து ஏதாவது கொண்டு வரவேண்டுமா?''

கர்னல் அச்சுதனைப் பார்த்தார். அச்சுதன் கர்னலைப் பார்த்தான். பேசுவதை நிறுத்திக் கொண்டான். கர்னல் கோப்பையை உதட்டில் பொருத்தி எடுத்தார்.

''நீ புத்திசாலி ஜவஹர். சரியாக ஊகித்து விட்டாய். ராவல்பிண்டி ஆர்மிக்வார்ட்டர்ஸில் இருக்கும் ஒரு துப்பாக்கி வேண்டும்.''

''துப்பாக்கி?''

''பிஸ்டல். ஏதோ ஒரு பிஸ்டல் இல்லை. நான் சொல்லப் போகும் ஒரு குறிப்பிட்ட பிஸ்டல். அது ஒரு டம்மி. அதில் இருக்கும் குண்டுகளும் டம்மி. அவை ட்ரிக்கரை இழுத்தால் எதிரியின் மீது பாயாது. காப்ஸ்யூல் போல இருக்கும். திறந்து மூடும் டைப். அந்த குண்டுகளில் ரகசியமாக ஒளித்து வைக்கப்பட்டிருக்கும் மைக்ரோ ஃபிலிம்கள்தான் எங்களுக்குத் தேவை....''

''அந்த மைக்ரோ ஃபிலிம்களில் என்ன அடங்கியிருக்கிறது என்று நான் தெரிந்து கொள்ளலாமா கர்னல்?''

கர்னல் அச்சுதனைப் பார்த்தார். அச்சுதன் எழுந்து, 'எக்ஸ்க்யூஸ் மீ' என்று மன்னிப்புக் கேட்டு வெளியேறினான்.

கர்னல் சொல்லத் தொடங்கினார்.

**அ**றையில் இருந்து வெளியேறிய அச்சுதன், கொச்சு வேலாயுதத்தை அழைத்தான். பிற்பகல் உணவுக்கு ஏற்பாடு செய்யச் சொல்லிவிட்டு வெளியேறினான்.

அவன் ஏறிய மாருதி வேன் அறுபது வினாடிகளுக்குள் தில்லியின் உற்சாகமான போக்குவரத்தில் கலந்தது.

சற்று நேரத்தில் கரோல்பாகின் இரைச்சலான தெருக்களில் சீறி, சுந்தர் லேனில் நுழைந்தது.

சாந்தினி ஜ்வெல்லர்ஸில் இருந்து சற்று தூரத்தில் நின்றது. அச்சுதன் இறங்குவதற்கு முன் பின் பார்வைக் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டான். சாந்தினி ஜ்வெல்லர்ஸ் நோக்கி நடந்தான்.

கடை வாசலில் இருந்த கூர்க்கா ஒரு முறை குனிந்து நிமிர்ந்து கதவைத் திறந்து விட அச்சுதன் உள்ளே நுழைந்தான்.

சாந்தினி கவுன்ட்டருக்குப் பின்னால் நின்றிருந்தாள். கடை கறுகறுப்பாய் இருந்தது. அங்கங்கே பொருத்தப்பட்டிருந்த விளக்குகளின் ஒளி வெள்ளத்தின் கீழ், வெல்வெட் பரப்புக்கு மேலே அமெரிக்க வைரங்கள் மின்னிக் கொண்டிருந்தன.

சாந்தினி எதையோ பறிகொடுத்தவள் போல் இருந்தாலும், அந்த முகத்தில் தெரிந்த சோகம், அவளுடைய அழகை வெகு அபாரமாகக் கூட்டியிருந்தது. அச்சுதன் அவளுக்காக வருத்தப்பட்டான்.

கண்ணாடி வழியே தெருவைப் பார்த்தவள் அருகே போய் நின்று, ''நமஸ்காரம்'' என்றான் மிக மெல்லிய குரலில்.

சாந்தினி திடுக்கிட்டுப் போய்த் திரும்பிப் பார்த்தாள்.

இவனை எங்கே பார்த்திருக்கிறேன் என்று யோசித்து அடையாளம் தெரிந்தவள் போல் மருண்டாள். அச்சுதனின் கையில் ஒரு துப்பாக்கி ரகசியமாக முளைத்தது. அவளைக் குறிவைத்தது.

''ஷ்.... சத்தம் போடாமல் என்னுடன் வா. இல்லாவிட்டால் நீயும் பிழைக்கமாட்டாய். உன் அண்ணனும் பிழைக்கமாட்டான்'' என்றான் அச்சுதன் மிரட்டும் குரலில்.

(தொடரும்)

ஆச்சரியம் பூக்க, அந்தச் சிறுவனை மீண்டும் பார்த்தேன்.

சைக்கிள் கேரியரில் அனசலாக இருந்த டிகிளாஸ் சாய்ந்துவிடாமல்கவனமாக இருந்தான். 'பன்'னைப் பிய்த்து மெதுவாக டீயில் நனைத்துத் தின்று கொண்டே பேசினான். சாமியார் மாதிரி பேச்சு — உலகத்தின் எந்தப் பெரிய கஷ்டமும் இனி அவனை எதுவும் செய்து விட முடியாதது போல!

திரும்பவும் — மறந்து போன மாதிரி கேட்டேன்: "ஆமா, உம் பேரென்ன சொன்னே?"

நிமிர்ந்து ஒருதரம் தலையைச் சாய்த்துப் பார்த்துவிட்டுச் சொன்னான்:

"ராமுக்கண்ணு எம். பி. பி. எஸ்."

நனைத்த 'பன்'னிலிருந்து டீ வழிந்து விடாமல் வெடுக்கென்று வாய்க்குள் தள்ளிக் கொண்டான்.

பத்துப் பன்னிரண்டு வயதிருக்கும். அதையும் குறைத்துக் காட்டும் வாடிய முகம். பிறந்த போது உச்சந்தலையில் எண்ணெய் வைத்திருப்பார்கள் போல, அலரி அடங்கிக் கிடந்த செம்பட்டை முடி. இந்த வயதிலேயே பழகிவிட்ட சாராயத்தால் பெருத்திருந்த கண்கள். வரிச்செலும்பு துருத்திய மார்புக் கூடு. வயசை மீறி ஊதிய வயிறு. சமையற்கட்டுக் கைப்பிடித் துணி போலக் கசங்கிக் கணமேறிப் பின்புறம் நைந்து கிடந்த டிரவுசரில் ஒரு பட்டன் கூட இல்லை. இறுக்கி முடிச்சுப் போட்டிருந்தான்.

ஏழாம் வகுப்பில் எனக்குப் பாடம் இடையாது. காலையில் முதல் பீரியட் முடிந்தவுடன் இவனைப் பார்க்கப் போன போது தான். இவன் வரவில்லை என்று பையன்கள் சொன்னார்கள்.

"சார்! எம். பி. பி. எஸ். ஸோட தாத்தா செத்துப் போயிட்டாரு சார்."

"இல்ல சார்! அவன்ன நா வர்றப்பக் கூட சாராயக் கடையிலே பார்த்தேன் சார்! மீனு வித்துக்கிட்டிருந்தான் சார்."

"லே! ஒவ்வொருத்தனாச் சொல்லு! தாத்தா செத்துப் போயிட்டாரா, எப்படா?"

"ஆமா சார். நீங்க சொன்னதிலேர்ந்து ரெண்டு மூணு நா ஒழுங்காத்தான் சார் வந்துக்கிட்டிருந்தான். நேத்து ராத்திரி — நடுச்சாமத்துல — அவுங்க தாத்தா செத்துப் போயிட்டாரு சார். இனிமே பள்ளிக்கூடத்துக்கு வரமாட்டானாம் சார். எட்டாம் வகுப்பு ஜெயாதான் சார் சொல்லிச்சு."

• "அது நெசந்தான் சார்! ஆனா நான் அவனை, காலையில பள்ளிக்கூடம் வர்றப்ப சாராயக் கடையில பார்த்தேன் சார். நீங்க வேணா ஜெயாவைக் கேட்டுப் பாருங்க சார்!"

பையன்கள் அவனவனுக்குத் தெரிந்த தகவல்களை உறுதிப்படுத்துவதில் குறியாயிருந்தார்கள்.

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி ரூ.250 ஆறுதல் பரிசுக் கதை-4

**நா. முத்துநிலவன்**

எனக்குள் குற்ற உணர்ச்சி மெள்ளப் பரவியது. முன் நெற்றி அரித்தது. 'இவனை மீண்டும் கவனிக்காமல், விட்டு விட்டோமா?'

ஆனால், இந்த ஸ்கூலுக்கு மாற்றி வந்ததிலிருந்து எனக்கு ஆச்சரியமாகவும் அவமானமாகவும் பட்டதெல்லாம் இங்கு சர்வசாதாரணமாகவே இருந்தது!

தஞ்சாவூர் நகர எல்லையைத் தொட்டுக் கொண்டு இருந்தது காந்திபுரம். அந்தப் பக்கம் நகரம். இந்தப் பக்கம் புதுக்கோட்டை ரோட்டைத் தொடும் புஞ்சைக் காட்டுப் பகுதி. காவிரியில் தண்ணீர் வந்த காலத்திலேயே இது வானம் பார்த்த சீமை தான். இப்போது ரெண்டுங்கெட்ட பிழைப்பு. ஆலாய்ப்பறக்கும்சேரி ஜனங்கள். சாராய ஊறலை நம்பிப் பல குடும்பங்கள். வேறு வேலைக்கு வழியில்லாத வாலிபர்கள், அடியாள் வேலைக்குப் பழக்கப்பட்டிருந்தார்கள். தற்காலிக சம்பாத்தியத்துக்காக முந்திரிக் காட்டுக்குப் போய்வரும் பாவப்பட்ட பெண்கள். மத்தியான சாப்பாட்டுக்காகவே — பெரும்பாலும் — பள்ளிக்கூடம் வரும் பிள்ளைகள். பழகிப் பார்த்த போதுதான் ஃபார்மாலிடி அறியாதபால் மனசுகள் பாசத்துக்கு ஏங்குவது புரிந்தது.

பள்ளிக்கூட நாளிலேயே மத்தியானச் சாப்பாடு முடிந்ததும் சின்னச் சின்ன வேலைகளுக்குப் போய் விடும் பையன்களைப் பார்க்க, நமது சுய ஆற்றாமை மேலெழும்பும். அரசாங்கம், ஆசிரியர் சங்கங்கள், அந்தப் பகுதிப் பெரியவர்கள் யாருக்குமே இது பற்றி அக்கறையில்லையோ என்று கோபம் கோபமாக வரும்.

**நா**ன் இங்கு வந்த புதிதில், எட்டாம் வகுப்பில் ஒருத்தன் சாராய வாடையோடு இருந்ததை விசாரிக்கப் போய், ஆறாம் வகுப்பிலேயே அது சர்வ சாதாரணம்தான் என்பது தெரிந்தது. போன மாதம் கக்கூஸிலிருந்து 'வெள்ளை பலூன்' ஒன்று கிடந்து பயல்கள் எடுத்து விளையாடியதை அதட்டப் போய், அதை முதல் நாள் 'பத்தாம் வகுப்பு சாமித் துரையின் புஸ்தக மூட்டையில் பார்த்ததாக' ஒருவன் சொன்னான்!

ஒவ்வொன்றும் முகத்தில் அறை விழுந்த நிகழ்ச்சிகள்.

போன வாரம் ஏழாம் வகுப்பில் அட்டெண்டென்ஸ் எடுத்த போது, ''ராமுக்கண்ணு ஏன் வரலை? அடிக்கடி வர மாட்டான் போலிருக்கு?'' என்று கேட்டதற்குப் பையன்கள் சொன்ன பதில், ஒவ்வொன்றும் மதுரைச் சொக்கநாதருக்கு விழுந்த அடி போல, யார் யாருக்கோ மனசு வலிக்க விழுந்திருக்க வேண்டிய அடிகள் — என் மீது விழுந்த மாதிரி இருந்தது.

''சார்! அவன் சந்தைக்குப் போயிருப்பான் சார்.''

''இல்ல சார்! சந்தையில பேப்பர் பொறுக்கிக் கொண்டாந்து கடையில போட்டுக் காசு வாங்குவான் சார்.''

''செவ்வாக்கிளமெ — சந்தை அன்னிக்கு — அவன் எப்பவுமே வர மாட்டான் சார்!''

''மத்த நாள்லயும் சாராயக் கடையில சாக்னா வித்துக்கிட்டிருப்பான் சார். எப்பயாச்சும் மத்தியானச் சோத்துக்கு மட்டும் பள்ளிக்கூடத்துக்கு வந்துருவான் சார்.''

ரெண்டு நாள் கழித்து அவன் வந்த போது பார்த்தேன். பழுப்பேறிக் கசங்கி — அடுக்குப் பானையிலிருந்து சுருட்டி மடக்கி எடுத்தது போல் இருந்த ஒரு சட்டையைப் போட்டுக் கொண்டு வந்திருந்தான். பழைய மஞ்சள் பை ஒன்றில் ஒரு நோட்டோ, புத்தகமோ இருந்திருக்க வேண்டும்.

எஸ். சி., எஸ்.டி.க்கென்று இலவசப் புத்தகம் தருவார்கள் என்பதால் பெரும்பாலானவர்கள் இங்கு ரெண்டு மூன்று மாதங்களுக்குப் புத்தகமில்லாமல்தான் இருப்பார்கள். அந்தப் புத்தகமும் பள்ளிக்கூடம் திறந்து நாலைந்து மாதம் கழித்துத்தான் வரும். அதுவும் இவன் ஒழுங்காய் வராததால் கிடைத்திருக்காது.

ஸ்டாஃப் ரூமில் தயக்கமில்லாமல் அருகில் வந்து குனிந்து கொண்டே, ''சார்! சாயந்தரம் பள்ளிக்கூடம் விட்டதும் எங்க தாத்தா ஒங்கள வந்து பாக்குறம்னு சொல்லச் சொல்லிச்சு சார்...'' என்று சொல்லி விட்டு நிமிர்ந்து பார்த்த போது, லேசாகச் சிரித்த மாதிரி தெரிந்தது.

''அட, எண்ணெ தடவாட்டியும் தலையச் சீவியிருக்கிற மாதிரி தெரியுதே! வெரி குட்! சரி.. எதுக்குத் தாத்தா வர்றாராமா? சரி நீ போ கிளாசுக்குப் போயிட்டுச் சாயந்தரம் மணி அடிச்சதும் என்னைப் பாத்துட்டுப் போகணும். என்ன?''





**மா**லையில் பள்ளிக்கூடம் விட்டதும் ராமுக்கண்ணு ஓடி வந்தான். கூடக் கிளம்பிய ஆசிரியர்களிடம் நான் கொஞ்சம் பின்னால் வருவதாகச் சொல்லி அனுப்பி விட்டு, ராமுக் கண்ணுவுடன் ரோட்டுக்கு வந்து, அருகில் இருந்த பெட்டிக் கடையில் சிகரெட் ஒன்று வாங்கிப் பற்ற வைத்துக் கொண்டே இவனிடம் பேச்சுக் கொடுத்தேன்.

தாத்தாதான் யார் கேட்டாலும் 'ராமுக்கண்ணு எம்.பி.பி.எஸ். என்று சொல்லச் சொல்லியிருந்தாராம். ஏன் என்று இவனுக்குத் தெரியாதாம். தாத்தாவுக்கு மாதம் அம்பது ரூவா 'பிஞ்சினு' வருதாம். இப்ப ரொம்ப வயசாயிருச்சாம். தேவர் வீட்டுக் கொட்டகையிலதான் இருக்காங்களாம்.

தாத்தா வந்து சேர்ந்தார். ராமுக்கண்ணுக்கு வயசானால் இப்படித்தான் இருப்பான்.

''வணக்கமுங்க. உங்களப் பத்திப் பசங்கள்லாம் சொல்லிக்கிட்டேயிருக்கும்...''

''வணக்கம். வாங்கய்யா அந்தக் கட்டையில உக்காருவம்'' என்று தாத்தாவிடம் இயல்பாகவே பேசத் தொடங்கினேன்.

''அது ஏன் பேரு கூட எம்.பி.பி.எஸ்.னு சேத்துச் சொல்றான்? நீங்கதான் அப்படிச் சொல்லச் சொன்னீங்கங்கிறான்!''

பாவமாக ரோட்டைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டுத் திரும்பினார். பெருமூச்சு விட்டிருக்க வேண்டும். லேசாக நடுக்கம் கண்ட தேகம். உழைத்துக் கருத்துச் சுருங்கிய உடம்பு, சுக்கு போல இரும்பாக ஒரு காலத்தில் இருந்திருக்க வேண்டும்.

''இவனோட பாட்டி ரொம்ப நாசிக்காளி

"அந்தப் போலீஸ்காரருக்கு ரொம்பத் தான் தைரியம்!"

"எப்படிச் சொல்றீங்க?"

"தான் கட்டிய வீட்டுக்கு, 'மாமூல் பவன்'னு பேர் வெச்சிருக்கார்னா பார்த்துக்குங்களேன்."

— டி. என். பாலகிருஷ்ணன்.



யாக் கெடந்தா. ஆசுபத்திரி கூடக் கொண்டு போய்க் காம்பிக்க முடியல. இந்தப் பய ஒரு நா சொன்னான்: 'தாத்தா, நா பெரிய படிப்புப் படிச்சு அப்பத்தாவுக்கு வைத்தியம் பாக்குறன் தாத்தாவ்'னு. அந்தச் சந்தோசத்துல ரெண்டு நா கெடந்துட்டு கண்ண மூடிட்டா மவராசி. ரெண்டு வருசமாச்சி. அப்ப ஏதோ வேகத்துல இவன எப்பிடியாவது 'டாக்குட்டருக்கு' படிக்க வைக்கணும்னு ஒரு வெறி. எங்க எசமான் ஒருத்தரு தெய்வம் மாதிரி இருந்து இவன் படிப்புக்கெல்லாம் ஒதவுறம்னு சொல்லியிருந்தாரு. அவரும் போன வருசமே பொக்குனு போயிட்டாரு... ஹூம்..."

"அப்பா இல்லியா?"

"இருக்கான். வெருவாக்கெட்ட பய. எங்கிட்டோ தஞ்சாவூர்ல ரிக்சா ஓட்டிக்கிட்டு எவளோடயோ இருக்கானாம். இவன் ஆயி பாவம்! நல்ல சாதியில பொறந்து இவன்ட்ட வந்து... கொஞ்ச நா நல்லாத்தான் இருந்தாவ. அவன் அப்படிப் போனான். இவளும் அப்பிடி இப்பிடி இருந்து பாத்துட்டு இப்ப எங்கியோ புதுக்கோட்டைல இருக்காளாம். இவந்தான் இங்கிட்டே கெடந்து என்னோட சீப்படுறான்...

"தொயந்து படிக்க வைக்கிணும்னுதான் பாத்தேன். இவனுக்கும் படிப்புன்னா அம்புட்டு ஆச. இப்ப ஒரு வருசமா எனக்கும் ஒடம்புக்கு முடிய மாட்டேங்கிது. நடக்கவே சீவனில்ல. ரெண்டு வவுத்துக்கு ஒரு வளியும் தெரியல. இந்த வயசிலயே எங்கெங்கயோ போறான். என்னான்னமோ வேலபட்டு அரை வவுத்துக்குப் பாத்துக்கக் கத்துக்கிட்டான்.

"நீங்கதான் மவராசன் — அவனுக்கு ஒரு வளியக் காட்டணும். தெய்வத்துக்கிட்ட சொல்ற மாதிரி ஒங்ககிட்டச் சொல்லிக்கிறேன். நா இன்னம் எத்தினி நாளோ... தெரியல..."

மூச்சு வாங்கியது. கண் மூடி மூடித் திறந்தார்.

எனக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. ஏதோ தைரியம் சொல்லி அனுப்பி வைத்தேன்.

இவனுக்கு உதவித் தொகை வாங்கித் தரலாம் என்றால், இவன் தொடர்ந்து பள்ளிக்கூடத்துக்கு வந்திருக்க வேண்டும். தொடர்ந்து வர வேண்டும் என்றால் சாப்பாட்டுக்கு? எனக்கு ராத்திரியெல்லாம் தூக்கமில்லை.

அடுத்த நாள் அந்த ஊர்ப் பெரியவர் ஒருவரைப் பார்த்து, ஒரு செட் புத்தகமும் நோட்டும் கேட்டேன். பேனாவோடு சேர்த்து வாங்கிக் கொடுத்தார். நான் ஒரு சட்டும், பையும் வாங்கி அவர் மூலமாகவே கொடுத்தேன்.

இரண்டு, மூன்று நாள் ஒழுங்காக வந்து கொண்டிருந்தான்.

நேற்று — சந்தை — திரும்பவும் காணாமல் போய் விட்டான்.

பள்ளிக்கூடம் விட்டதும் சந்தைப் பக்கம் போனேன். மேல் சட்டை இல்லாமல் கிழிந்த டிரவுசரோடு, சாக்கு மூட்டை முதுகில் கிடக்க ஓடி ஓடிப் பேப்பர்களைப் பொறுக்கிக் கொண்டு இருந்தான். நெஞ்சு பகீரென்றது.

என்னைக் கண்டதும் ஒதுங்கி, பேசாமல் நின்றான். சாக்கு மூட்டை இரண்டு கால்களுக்கிடையில் நின்றது. முக்கால் சாக்கு பேப்பர்.

சுருங்கிய முகம். எனக்கே இங்கு வந்து இப்படி இவனைப் பார்த்திருக்க வேண்டாம் போலத் தோன்றியது.

சைக்கிளை நிறுத்தி, அருகில் போனேன்.

"இந்தப் பேப்பரைப் போட்டு என்ன செய்யப் போறே?"

பேசாமல் இருந்தான். என்னைப் பார்ப்பதைத் தவிர்த்து, என் பழைய சைக்கிளைப் பார்த்தான். அக்கம் பக்கம் கிடந்த பேப்பர்களில் கண் ஓடியது. சுத்தி சந்தைக் கூட்டம். சந்தைக்கே உரிய கலந்துகட்டியான இரைச்சல். எரிச்சலாக வந்தது எனக்கு.

மீண்டும் அவனுக்கு மட்டும் கேட்பது போல் அதட்டலாகக் கேட்டேன்:

"சொல்றா, என்ன பண்ணப் போறே?"

மெதுவான குரலில் குனிந்து கொண்டே சொன்னான்:

"சட்டையில்லன்னு எல்லா நம் கிண்டலடிக்கிறாங்க..." நிமிர்ந்து பார்த்து விட்டு அவசரமாக வேறு பக்கம் திரும்பிக் கொண்டான்.

"சரி வா" என்று கூறித் திரும்பினேன். அவன் வருவது போல் இல்லை.

"...த்தாரா.. அங்கெ சட்டை விக்கிறாங்க." கொஞ்சம் தள்ளிக் கை காட்டி



Colour Photo : Raja Ponsingh



னான். பையைத் தடவிப் பார்த்தேன். எனக்கே என் மீது எரிச்சல் வந்தது.

"சந்தையில வாங்க வேணாம். உனக்கு நா சட்டை வாங்கித் தாரேன்... பேசாம வா."

"இல்ல சார். அங்கிட்டுப் பழைய சட்டையெல்லாம் விக்கிறாங்க. மீனு வித்து மூணு ரூவா வச்சிருக்கேன். இந்தப் பேப்பரைப் போட்டா..." முழுசாக முடிக்காமல் முன்னே போனான். விறுவிறுவென்ற நடை.

சந்தையின் ஒரு பக்கத்தில் பழைய சட்டைத் துணிகள் வியாபாரம். எங்காவது ஓரிரு சின்னக் கிழிசல்களுடன் கூடிய பல தரப்பட்ட துணிகள், சட்டை, டிரவுசர், பாவாடை, புடவை... கூவிக் கூவி விலை சொன்னார்கள்.

சாரதாஸ்... ரஞ்சனாஸ்... விளம்பரங்கள் நினைவு வந்து பின்னணியில் இந்தச் சந்தைக் கடை இரைச்சலிட்டது. எனக்கு என்னவோ போலக் கிறுகிறுப்பாயிருந்தது. ஒரு மரத்தடியில் நின்று கொண்டேன். அவனை இப்போது தடுக்கச் சக்தியில்லை.

பேப்பர் போட்ட காசும் போதவில்லையாம்.

'நாளைக்கு எப்படியும் ஒரு சட்டை வாங்கி விடுவோம்' என்று சமாதானப் படுத்தி, அவனையும் அழைத்துக் கொண்டு திரும்பினேன்.

**இன்று**

'பன்'னைத் தின்று டீயையும் குடித்து முடித்துப் புறங்கையால் வாயைத் துடைத்து விட்டுக் கொண்டான். டிரவுசரை ஒரு தரம் இறுக்கி முடிந்து அரைஞாண் கொடியை மேலேற்றிப் போட்டுக் கொண்டான். நூல் நூலான அரைஞாண் கயிறு.

தாத்தாவை, காலையிலேயே முனிசிபால்டி வண்டியில் கொண்டு போய் விட்டார்களாம். அழுது கூடவே ஓடியவனைப் பக்கத்தில் இருந்தவர்கள்தான் தடுத்து நிறுத்தியிருக்கிறார்கள். ராத்திரியிலிருந்து ஒண்ணும் சாப்பிடவில்லை. எட்டாம் வகுப்பு ஜெயா பள்ளிக்கூடத்திலிருந்து கொண்டு வந்து கொடுத்த மத்தியானச் சாப்பாட்டையும் தொட வில்லையாம்.

"சரி... டீ கிளாஸைக் குடுத்திட்டு வா."

கொஞ்ச தூரத்தில் எனது நண்பருடன் ஓவிய ஆசிரியர் வந்து கொண்டிருந்தார். இவனைப் பற்றி நேற்றுத்தான் பேசியிருந்தோம். நண்பர் கவிதை எழுதும் பழக்கமுடையவர். கண்கள் விரிய அவனைப் பார்த்தார். ஆதரவாகத் தோளைத் தொட்டு, "உன் பேரென்ன தம்பி!" என்று கேட்டார்.

"ராமுக்கண்ணு எம்.பி.பி.எஸ்" என்று அழுத்தமாகக் கூறியவன், டீக் கிளாஸை எடுத்துக் கொண்டு கடையை நோக்கிப் போனான்.

# அறிமுகம்: பரிசுபெற்ற எழுத்தாளர்கள்

அமரர் கல்கி எழுதிய மகுடபதி என்ற நாவலுக்கு முன்னுரை வழங்கிய ரசிகமணி டி. கே. சி., பின்வருமாறு குறிப்பிடுகிறார்: ''எதிர்பாராத சம்பவங்கள் நம் வாழ்க்கையில் அடிக்கடி நடந்து கொண்டே இருக்கின்றன. அவற்றை லட்சியம் செய்யாமல் அப்படியே நாம் மறந்து விடுகிறோம். மறந்து போகாதபடி ஒரு டைரியில் குறித்து வைப்போமானால் பின்னால் படிக்கும் போது விசித்திரமாக இருக்கும்.''

அனுபவங்களைக் கதையாக வழங்கும் போதுதான் அது உள்ளத்தைத் தொடுகிறது. இலக்கியமாகவும் மலர்கிறது. இதற்கு இந்த வருஷம் முதல் பரிசு பெற்றுள்ள சிறுகதையைவிட வேறு நிரூபணம் தேவையில்லை.

'சத்திய சந்தன்' என்ற புனைபெயர் பூண்டிருக்கும் ச. கணேசன், தி. ஜானகிராமன் முதல் பிரபஞ்சன் வரை பலரது கதைகளைப் படித்து ரசித்து மகிழ்ந்திருக்கிறார். எட்டு வருஷங்களாகக் கல்கி சிறுகதைப் போட்டிக்கு எழுதிப் பார்த்தும் இருக்கிறார். ஆனால் வெற்றி கிட்டவில்லை. இந்த வருஷம் தமது மூன்று வருஷ லாரி கிளீனர் வாழ்க்கையைச் சிறுகதையாக அமைத்தார். முதல் பரிசையே தட்டிக் கொண்டு போனார். அதுவும் அறிமுக எழுத்தாளராகவே!

சிவகாமியின் சபதத்தில், ''எந்த ஊர்'' என்று காவலர்கள் தன்னை விசாரிக்கும் போது, பரஞ்சோதி, ''சோழ நாட்டில் செங்காட்டாங்குடி கிராமம்'' என்று சொல்கிறான் அல்லவா? அந்த ஊரிலிருந்து ஒரு கி. மீ. தூரத்தில் உள்ளது சியாத்தமங்கை. இங்கே பிறந்த கணேசனுக்கு இன்று வயது 29. + 2 வரை படிப்பு. இன்னும் திருமணமாகவில்லை. இப்போது ஆற்றும் அரசுப் பணி, வேளாண்மைப் பொறியியல் துறை உழவை வாடகைத் திட்டத்தில் டிராக்டர் டிரைவர். மயிலாடுதுறை வட்டாரத்தில் ''டிக்கடி டிக்கடி... டிக்கடி... என்று டிராக்டர் ஒலியைச் சதா கேட்டுக் கொண்டிருந்தாலும் மனம் மட்டும் சிறுகதைகளைப் பற்றியே யோசித்துக் கொண்டிருக்கிறது'' என்று கூறும் சத்திய சந்தன், இப்போது சிறுகதை எழுதும் நுணுக்கத்தை அனுபவபூர்வமாகப் புரிந்து கொண்டு விட்டதால் எதிர்காலத்தில் ஏகப்பட்ட சிறப்புக்களைத் தமக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் குவிப்பார் என்று நம்பலாம்.

இரண்டாவது பரிசுக் கதையிலும் அனுபவ முத்திரை நன்றாகவே பதிந்திருப்பதை நேயர்கள் உணர்ந்திருக்கிறார்கள். குவெய்த்தில் பணியாற்றச் சென்றவர் என்ற முறையில் நிலைக்களன் மாறுபட்டு, சுவாரஸ்யத்தை அதிகரிக்கச் செய்கிறது. தாய் மொழிப் பற்று, இனப் பற்று, குழந்தைப் பாசம், பிரிவாற்றாமை இவை அயல்நாட்டில் வாழ நேரும் போது கூடுதலாகவே ஒளிர்வது இயல்புதானே. இவையெல்லாம் கதைக்கு ஜீவகளை அளிக்க, பாரதிதாசன் நூற்றாண்டில், அவரது கவிதை வரி, தலைப்பாக அமைந்து, கதையின் முடிவுக்கும் உதவி, பெருமை சேர்த்திருக்கிறது.

இயற்பெயர் எஸ். வேங்கடரமணி, வயது 36. பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னரே 'வாய்மையே வெல்லும்' என்ற தலைப்பில் கல்கி நடத்திய கல்லூரி மாணவர்களுக்கான கட்டுரைப் போட்டியில் பரிசு பெற்றவர். 'சத்யமேவ ஜயதே' என்ற நூலில் ராஜாஜி கையெழுத்துப் போட்டுத் தந்து ஆசீர்வதித்தார். குவெய்த்தின் பாரதி கலை மன்றத்துக்காகக் ''கொட்டு முரசே!'' என்ற கையெழுத்துப் பத்திரிகை தயாரிக்கிறார். தமது குழந்தைகள் ஜெயந்த், பரத், ப்ரீதி ஆகியோரின் பெயர்கள் இணைந்துள்ள விதமாக 'ஜெயப்ரபா' என்ற புனைபெயர் வைத்துக் கொண்டார்.

தற்போதைய குவெய்த் யுத்தத்தில் நமது ஜெயப்பிரபாவும் அவரைப் போன்ற ஏராள இந்தியர்களும் எவ்விதத் துன்பமும் இன்றி விளங்க நமது பிரார்த்தனைகள்.

ஸ்டெல்லா புரூஸுக்கு வயது 48. இதுவரை 40 சிறுகதைகள், 3 குறுநாவல்கள், 6 நாவல்கள், 'காளிதாஸ்' என்ற புனைபெயரில் 50 கவிதைகள் எழுதியிருக்கிறார். மர்மக் கதைகள் எழுதுவதில் அபாரத் திறமை காட்டியிருப்பதைத் தமிழ்ப் பத்திரிகை வாசகர்கள் நன்கு அறிவார்கள். மூன்றாவது பரிசுக் கதையில் கொலை,



• 'சத்தியசந்தன்'



• 'ஜெயப்ரபா'



• சகுபர் ஷாதிக்



• நா. முத்துநிலவன்



• 'ஜனனி'

கொள்ளை, துப்பறிதல் என்று ஏதுமில்லாமலே மிக சுவாரஸ்யமான முறையில் ஒரு மர்மமுடிச்சை அவிழ்க்கின்ற பாணி ரசனைக்குரியது. தமது வாழ்க்கையிலேயே நிகழ்ந்த மிக முக்கிய சம்பவம் ஜே. கிருஷ்ணமூர்த்தியின் ஞான ஒளி நோக்கித் தமது முகம் திரும்பியதுதான் என்று குறிப்பிடும் 'ஸ்டெல்லா புரூஸ்,' 'உண்மையான அன்புதான் மனித வாழ்வின் அத்தனை இன்னல்களையும் நீக்கி மனத்தை மேம்படுத்தக் கூடியது' என்பதைப் புரிந்து கொண்டிருக்கிறார். 'இதுவே இருபது ஆண்டுகளுக்கு முன் தாம் அனுபவிக்க நேர்ந்த ஒரு கொடிய துக்கத்தைத் தாங்க உதவியிருக்கிறது' என்றும் கூறுகிறார். அவரது தத்துவ விசாரமும் தேடல் பயணமும் தொடரத் தொடர நமக்கு மேலும் சிறந்த இலக்கியங்கள் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.

**ம**ற்றொரு மூன்றாவது பரிசைத் தட்டிக் கொண்டு போன ஆர். பாண்டியன், கதைத் தலைப்பில் மட்டுமின்றி அறிமுக எழுத்தாளர் என்ற முறையிலும் 'புதிய சரித்திரம்' படைத்திருக்கிறார்.

வடுவூரில் பிறந்த பாண்டியன், படிப்பை விடத் திரைப்பட வசனங்களால் அதிகமாக ஈர்க்கப்பட்டார். பள்ளி இறுதித் தேர்வில் தோல்வியுற்றவர், 'லட்சியத்தில் வென்றே தீருவது' என்ற நோக்கில் தமது மாமாவான நடிகர் ஆர். முத்துராமன் இல்லத்தை அடைந்தார். 'நவரசத் திலகத்'தின் வீடு, இரண்டாவது தாய் வீடாகவே விளங்கியது. பஞ்சு அருணாசலம், பி. மாதவன், ஸி. வி. ராஜேந்திரன், செல்வராஜ், தேவராஜ் மோகன் போன்றவர்களிடம் துணை இயக்குனராகச் செயல்பட்டிருக்கிறார்.

இதனால்தானோ என்னவோ, சிறுகதையின் முடிவில் சிறிதளவு 'சினிமாத்தனம்' புகுவதை இவரால் தவிர்க்க முடியவில்லை. கிளைமாக்ஸ் அப்படி 'பில்ட் அப்' ஆகிறது! ஆயினும் கதையில் அவர் கூற வந்த கருத்து மிக அருமையானது. கதையினூடே அது மிக இயல்பாகக் கலையுணர்வுடன் வெளிப்படுகிறது. ஆர். பாண்டியன் எழுத்துத் துறையில் மட்டுமின்றி, அவருக்கு மிகவும் பிடித்தமான திரைப்படத் துறையிலும் புதிய சரித்திரம் படைக்க நமது வாழ்த்துக்கள்.

**எ**ந்த வருஷமும் இல்லாத விதமாக இந்த ஆண்டு மூன்று ஆறுதல் பரிசுகளை வழங்குமாறு நடுவர்கள் தீர்ப்பளித்தனர்.

* ஸ்டெல்லா புரூஸ்



* ஆர். பாண்டியன்



குடும்பச் சூழலில் உணர்ச்சிமிக்க சிறுகதைகள் பின்னுவதில் மன்னரான 'அன்னம்' கே. விசுவநாதன், தமிழ்ப் பத்திரிகை வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர். அமரர் தேவனின் மருமானும் கூட. இவரது பல புனைபெயர்களுள் ஒன்று, பேத்தியின் பெயரான 'ஜனனி'. கல்கி சிறுகதைப் போட்டிகளில் இவர் பரிசு பெறுவது இது மூன்றாவது முறை. முப்பத்தோரு வருஷங்களில் 905 சிறுகதைகள் பிரசுரமாகியுள்ளன. ஒருவேளை கின்னஸ் சாதனையோ!

**ஆ**றுதல் பரிசு பெற்ற இரண்டாவது சிறுகதை, அனுபவ ரீதியாக ஒரு டாக்டரே எழுதியது. ஆதலால், மருத்துவமனைச் சூழ்நிலையும் நோயாளி, மற்றும் அவரது உறவினரின் மனநிலையும் துல்லியமாகச் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. சகுபர் ஷாதிக் ஒரு டாக்டர் என்றாலும் அவரது இரு கால்களும் குழந்தைப் பிராயத்திலேயே போலியோவினால் பாதிக்கப்பட்டன. இதனால்தானோ என்னவோ அவரது எழுத்தில் துல்லியமான புறப்பார்வையும், மெலிதான சோகமும், ஆழ்ந்த உள்நோக்கும் அமைந்திருக்கின்றன. இவரது முதல் சிறுகதை சாவியில் பிரசுரமாயிற்று. விகடன் பொன்விழா போட்டியில் மாணவர் சகுபர் ஷாதிக் ரூ. 5000 பரிசு பெற்றார். கல்கியில் இவர் எழுதிய பல கதைகளுள் ஒன்றான 'உயிர்' இலக்கிய சிந்தனையின் பாராட்டைப் பெற்றுள்ளது.

**நா.** முத்துநிலவனுக்கு வயது 34. இயற்பெயர் முத்துபாஸ்கரன். புதுக்கோட்டை அரசு முன் மாதிரி மேல்நிலைப் பள்ளியில் ஆசிரியர். எனவேதான் தமது மாணவன், 'காந்தி புரத்து ராமுக் கண்ணு'வை அவ்வளவு யதார்த்தமாகச் சித்திரித்து நம்மை நெகிழச் செய்திருக்கிறார். 1986 — இல் கல்கி சிறுகதைப் போட்டியில் அறிமுகமாகிப் பரிசு பெற்ற இவர், அதன்பின் நான்கு சிறுகதைகளே எழுதியுள்ளார். 'ஸ்லோ ரைட்டர்' என்று தம்மை வர்ணித்துக் கொள்வது உண்மையேயானாலும், 'ஸ்டார் ரைட்டர்' என்பதையும் மறுப்பதற்கில்லை. முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தில் மாநிலத் துணைச் செயலர்.

'**ப**ரிசு பெறுவோர் நால்வர் அல்ல; எழுவர்' என்று அறிவித்த நடுவர்களுக்கு நன்றி. இத்தகைய மேலான முடிவுக்கு அவர்களை வரச் செய்வதில் வெற்றிகண்ட தகுதி மிக்க எழுத்தாளர்களுக்கு வாழ்த்துக்கள்.

— பி. எஸ். எம்.

# அ.தி.மு.க. பேரணியின் போது ரகளைகளைப் பார்த்தீர்களா?



* உருப்படியான காரியம்

* **என். முருகேஷ், பெருஞ்சேரி.**

? **தொலைக்காட்சியில் பாலகுமாரனின் 'தாயுமானவன்' தொடர் எப்படி?**

! எழுத்து வேறு; டி. வி. – வீடியோ மீடியம் என்பது வேறு. முன்னதில் முதிர்ச்சி காட்டுகிறவர், பின்னதில் பால – குமாரனாகவே இருக்கிறார். சில காலம் செல்லும் அவர் நம்மை ஆட்கொள்ள.

* **ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.**

? **தமிழகத்தில் நல்ல சாராயம் கிடைப்பது பற்றி?**

! அதைவிடக் குறைந்த விலையில் அந்தக் கடைகளிலேயே சுறு சுறு ஏற்றும் கள்ளச் சாராயமும் கிடைப்பதால் அரசின் பிரசாரப் படுத்தப்பட்ட நோக்கம் பொய்யாகிறது.

* **வண்ணை கணேசன், சென்னை.**

? **திருமணத்துக்குப் பின் ஒரு நடிகை நடிப்பதில் தவறென்ன இருக்கிறது?**

! 'ஒரு தவறும் இல்லை' என்று அவள் கணவன் நினைக்க வேண்டும். நீரும் நானும் நினைத்து என்ன பிரயோஜனம்?

* **மல்லிகை மன்னன், மதுரை.**

? **'இதுவரை கலைஞர் ஆட்சி நடத்தும் செயின்ட் ஜார்ஜ் கோட்டையை மட்டும் காக்கும் பொறுப்பு எங்களுக்கு இருந்தது; மண்டல் கமிஷன் அறிக்கையை அமுல்படுத்தும் விஷயத்தில் இனி டில்லி செங்கோட்டையையும் பாதுகாக்கும் பொறுப்பு எங்களுக்கு வந்துவிட்டது' என்கிறாரே, வீரமணி?**

! சில பேர் இப்படித்தான்; உதவுவதாக எண்ணிக் கொண்டு உயிரை வாங்குவார்கள். இவர்களுடைய ஆதரவைப் பெறுகிறவர்கள் விடேன் தொடேன் என்று கிடந்து தவிப்பார்கள். அப்படித் தவிப்பதாகவும் வெளியே காட்டிக் கொள்ள முடியாமல் திணறுவார்கள். பாவம், வி. பி. சிங்.

* **ஜி. குசேலன், சங்கராபுரம்.**

? **'நாடாளுமன்றம், சட்டப் பேரவைகளில் ஏழைகளுக்கு நாற்பது சதம் ஒதுக்கீடு' என வி. பி. சிங் அறிவித்துள்ளாரே?**

! ஐந்தாண்டுகளுக்குப் பிறகு நிச்சயம் அவர்கள் ஏழைகளாக இருக்கப் போவதில்லை! இரண்டு, மூன்று ஆண்டுகளிலேயே 'சம்பாதித்து' விடுவார்கள்! இப்படியே தொடர்ந்து வந்தால் பத்தாயிரம் ஆண்டுகளில் ஏழைமையை ஒழித்து விடலாம்!

* **பொன். ரவிச்சந்திரன், திருச்சி.**

? **மேல்சபை வருவதால் என்ன பயன்?**

! மேல்சபைஎன்பதுஎதற்காக உருவாக்கப்பட்டதோ அந்த லட்சியத்தைப் புரிந்து கொண்டு ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் நடத்து கொண்டால் நிறையவே பலன் உண்டு. இல்லையேல் ஆளும் கட்சி தங்களுக்கு வேண்டப்பட்ட சிலபேரை மேலே கொண்டு வர மட்டுமே மேல்சபை பயன்பட்டதாகிப் போகும்.

* **கிஷோர், திருச்சி.**

? **'இந்த ஆறு மாதங்களில் என் தலையில் உள்ள பல ரோமங்கள் நரைத்து விட்டன' என்கிறாரே, மேனகா காந்தி?**

! சுற்றுப்புறச் சூழல் இலாகா முழுவதும் தன் வசமே இருக்க வேண்டும் என்ற ஆசை நரைத்ததாகத் தெரியவில்லையே!

* -ஜெ'க்கு ஆதரவு



* ஆசை நரைக்கவில்லை!





* தொடர் எப்படி?



* பாவம், வி. பி. சிங்!

*** சைதை ஆர். முரளி, சென்னை.**

**? விமர்சகர்கள் எப்படிப்பட்டவர்களாக இருக்க வேண்டும்?**

! எந்த ஒரு நிகழ்ச்சியையும் 'கவர்' பண்ணப்போகும்போது 'கவர்' வாங்காதவர்களாக இருக்க வேண்டும்.

*** வே. செந்தில்குமார், கொங்கணாபுரம்.**

**? இந்த வருட சுதந்திரதினக் கொண்டாட்டங்கள் எப்படி?**

! மணிக்கணக்கான பேச்சுக்களிடையே சிக்கித் தவித்த நமது திண்டாட்டங்கள்!

*** எஸ். யோகலிங்கம், சென்னை.**

**? பாக்யராஜ், ஜெயலலிதா அணிக்கு ஆதரவு தெரிவித்திருப்பது குறித்து...?**



* தட்டியில்...



...கோலத்தில் *

! 'எப்படா ராமராஜன் இடத்தைக் காலி பண்ணுவார்' என்று காத்திருந்தார் போல...

*** கே. மகேஷ், சங்கராபுரம்.**

**? மணிரத்னத்துடன் ஸ்ரீராம்; மணிரத்னத்துடன் மது அம்பாட் தங்களைக் கவர்ந்த ஜோடி?**

! மல்லிகைப்பூ இட்டிலிக்குத் தொட்டுக்கொள்ள சட்னி, சாம்பார், மிளகாய்ப் பொடி — எண்ணெய் எதுவானால் என்ன? ஒவ்வொன்றும் ஒரு ருசி.

*** அ. நவ்சாத், மொரப்பூர்.**

**? சுயநலத்துக்கு ஓர் உதாரணம்?**

! தனி நபர் ஆணவம் காரணமாகக் கட்சியை உடைத்ததுடன் தமிழகத்தில் உருப்படியான எதிர்க்கட்சியும் எதிர்ப்புப் பணியும் இல்லாமல் ஜனநாயகம் சீர்குலைய அனுமதித்துள்ள அ. தி. மு. க. தலைவர்கள்.

*** கே. ஆர். பவானி, சென்னை — 94.**

**? வாசகரிடம் ஆலோசனை கேட்டு இதழ் தயாரிக்கும் அளவுக்கு இருக்கும் இன்றைய நிலைக்கு உண்மைக் காரணம் என்ன தராசே?**

! வாசகர்கள் பங்கேற்பது, யோசனை கூறுவது என்பதொன்றும் புதிய விஷயமல்ல. எப்போதுமே பல ரூபங்களில் இருந்து வருவதுதான். கல்கி பொன் விழாவையொட்டி இப்போது அதற்கு ஒரு திட்டவட்டமான வடிவம் தந்து பரிசும் வழங்கப்படுகிறது என்பதுதான் புதுமை. ஏன், நீங்களும் முயன்று பார்க்கலாமே! பிரபலங்களால் மட்டும்தான் நல்ல யோசனைகள் வழங்க முடியும் என்று எண்ணாதீர்கள். உங்களாலும் முடியும்!

*** ஆர். நெடுஞ்செழியன், சென்னை — 41.**

**? இன்று ருசிகரமானது டெல்லி அரசியலா? தமிழக அரசியலா?**

! இரண்டுமே கசப்பு.

*** ஆர். அப்துல் சலாம், மன்னார்புரம்.***

**? 'போர் அபாயம் நீங்கும் வரை, அந்நிய நாட்டவரைச் சிறை வைப்பது நீடிக்கும்' என்று ஈராக் நாடாளுமன்றத் தலைவர் அறிவித்திருப்பது எதைக் காட்டுகிறது?**

! புஷ் தட்டியில் புகுந்தால் ஸத்தாம் ஹுஸைன் கோலத்தில் பாய்வார் என்பதைத்தான்!

*** எஸ். ராம்கோபால், சென்னை — 33.**

**? ஜெயலலிதா தலைமையில் அ.தி.மு.க. பேரணி புறப்பட்டுச் சென்ற போது வாலாஜா சாலையில் நடந்த ரகளைகளைப் பார்த்தீர்களா?**

! கட்சியை உடைத்தது; அதைப் பலவீனப்படுத்தியது; கட்சியின் தலைமைச் செயலகத்துக்காக நடந்த போராட்டம்; பேரணி; சட்ட மன்றத்தில் நடந்த, தொடர்கின்ற அ. தி. மு. க. ரகளைகள் முதலிய எல்லாமே தவிர்க்கப்பட்டிருக்கக் கூடிய விபரீதங்கள். நடந்திருக்கும் ஒரே ஒரு உருப்படியான காரியம் சட்ட மன்றத்தில் ரிஜிஸ்தரில் ஜெயலலிதா கையெழுத்திட்டுத் திரும்பியிருப்பதாகும்.

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**ஆர். அப்துல் சலாம்,**
**12, தெற்கு 2 வது தெரு,**
**மன்னார்புரம், திருச்சி — 20.**


ஓர் இண்டர்வியூ......
கதை: தமிழழகன்
படம்: செல்லம்
இண்டர்வியூவுக்குப் போகும் அவசரத்தோடு பஸ்ஸைவிட்டு இறங்கி நடந்தான் வேதன். வழியில் நின்ற கூட்டத்தைக் கண்டதும் விசாரித்தான்......
என்னாங்க ஆச்சு?
யாரோ ஒருத்தன் ஸ்கூட்டரை மோதிட்டுப் போயிட்டான். பாவம் பெரியவர்.
யாரும் உதவலையா?
அவரவருக்கும் ஆயிரம் வேலை. நமக்கென் தம்பி வம்பு...
வேதனுக்கு மனம் ஒப்பவில்லை. இண்டர்வியுவுக்கு நேரமானாலும் பரவாயில்லை என்று பெரியவரை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றான்.
வாங்க பெரியவரே! மெல்ல...
இண்டர்வியூ முடிந்து முடிவும் சிறிது நேரத்தில் தெரிய இருந்தது. தாமதமாக வந்த தனக்கு எங்கே கிடைக்கும்? வேதன் கிளம்ப நினைத்த போது கம்பெனி எம். டி. வந்து பேசினார்...
டியர் ப்ரண்ட்ஸ். சரியான நபரை நாங்கள் செலக்ட் செய்து விட்டோம். அதற்கு ஒரு நிகழ்ச்சி உதவியது...


அனைவரும் ஆர்வத்தோடு அவரைப் பார்த்தனர். எம்.டி. தொடர்ந்து பேசினார்....
...ஆபீஸுக்கு வெளியே ஒரு விபத்து. நம் மானேஜர் தான் ஸ்கூட்டரில் ஒரு பெரியவரை மோதிவிட்டுப் பயந்து போய் ஓடி வந்து சொன்னார். நான் மாடிக்குப் போய்ப் பார்த்தேன்....
...அப்போது பலரும் கண்டு கொள்ளாமல் சென்றபோது ஓர் இளைஞர் மட்டும் பெரியவருக்கு உதவினார். நமது வேலை பொது மக்கள் தொடர்பான வேலை. அதற்கு அந்த இளைஞரே சரியான நபர் என்று தீர்மானித்து விட்டேன். அவர் பெயர் வேதன்.
வேதன் சந்தோஷத்தோடு எம்.டி.யிடம் சென்று கைகுலுக்கினான்.
தாங்க்யூ சார்.

## வட்டமேஜை

* வெறும் உள்நாட்டுப் பிரச்னைகளை மட்டுமே பார்க்காமல், பக்கத்து நாடான பாகிஸ்தானில் நடைபெறும் பிரச்னைகளையும், அதனால் நமக்கு வரும் ஆபத்துக்களையும் விளக்கியது தலையங்கம்.

பொள்ளாச்சி, ஏ. வி. பிரபு.

* பேனசிர் புஸ்மில் செய்யப் பட்டதால் இந்தியாவுக்கு எப்படி ஆபத்துப் பெருகும் என்பதைவிளக்கிய தலையங்கம் அருமை. பாகிஸ்தானில் மீண்டும் ராணுவ ஆட்சி அமைகிறதே என்ற கவலை நமக்கு அதிகமாகி இருக்கிறது. இப்பொழுது இருக்கும் பாகிஸ்தான் அதிபர் நிச்சயம் நம் காஷ்மீர் விஷயத்தில், பேனசிரே தேவலாம் என்று ஆக்குவார் என எதிர்பார்க்க, அதிக இடமிருக்கிறது. அதனால் — தலையங்கத்தில் கூறப்பட்டது போல், பாகிஸ்தானில் நடந்தது உள்நாட்டு விவகாரம் என்றாலும், ஆட்சி மாற்றம் காஷ்மீரை எந்த அளக்குப் பாதிக்கும் என்பதை இந்தியா உணர்ந்து உஷாராக இருக்க வேண்டும்!

சென்னை — 35,

எஸ். வி. ராஜசேகர்.

* என். ஆர். பொம்மை அளித்த சிறப்புப் பேட்டியில், கல்கி தொடுத்துள்ள வினாக்கள், அவரையே திணறடிக்க வைத்து விட்டன என்பதற்கு ஆதாரம், 'இது சூக்ஷ்மமான கேள்வி' என பொம்மையே சொல்லும் அளவுக்கு இருந்ததுதான்!

சென்னை — 51, வா. வசந்தி.

* திருபர் கேட்ட ஒவ்வொரு கேள்விக்கும் மிகச் சாதுர்யமாகப் பதில் கூறித் தாம் வெறும் பொம்மை அல்ல என்பதை நிரூபித்து விட்டார் பொம்மை!

சென்னை — 35, எஸ். தங்கராஜு.

* சௌதாலா பிரச்னை என்ன? அவர் மீது வீசப்பட்ட குற்றச்சாட்டுக்களுக்கு முகாந்திரம் உண்டா என்று கேட்கிறார் பொம்மை. இதுவரை சௌதாலாவைக் குற்றச்சாட்டுக்களுக்குப் பொறுப்பேற்றுத் தான் முதலமைச்சர் பதவியை ராஜினாமா செய்யச் சொன்னார்கள் என்று நினைத்திருந்தோம். பொம்மையோ இப்போது இப்படிக் கூறியிருக்கிறார். அப்படியானால் ஏன் சௌதாலாவை ராஜினாமா செய்யச் சொன்னார்கள்? முரண்பாடாக இருக்கிறதே!

வேலூர் — 4, கே. பி. சாரதி.

* 'ருமேடிக் ஹார்ட் அலிஸ்மெண்ட்' நோயின் ஆரம்ப

# பொம்மையைத் திணற வைத்த கேள்விகள்!

நிலையை அறியாது, பல்வேறு வகையில் மருத்துவம் செய்து கொண்டு தாம் பட்ட துன்பங்களை ராமஸ்வாமி தெரிவித்திருக்கிறார். தங்களின் நோயின் தன்மையை அறியாமல் தங்கள் உடலைப் பல்வேறு வைத்தியங்களால் பாழாக்கிக் கொள்கிறவர்களுக்கு முன்னெச்சரிக்கை செய்த கல்கியின் பணி பயனுள்ள பணி ஆகும்.

அரக்கோணம்,

பொ. பா. லோகாபிராமன்.

* இந்தியாவில் 60 லட்சம் பேருக்கு இதய நோய் இருக்கிறதா? "வளர்ந்துவிட்ட மேற்கத்திய நாடுகளில் எல்லாம் இதனை ஒழித்து விட்டார்கள். ஆனால்நமதுநாட்டில் மட்டும் கொடிகட்டிப் பறக்கிறது" என்ற டாக்டரின் வரிகள் நெஞ்சை உலுக்கிவிட்டன. அரசு தனது காதுகளில் இதனைக் கேட்டுக் கொண்டால், நல்லது.

சென்னை — 68,

எம். கே. ராஜகுமார்.

* 'இணைந்த கைகள்' படத்தைப் பற்றி ரசிகர்கள் செய்திருக்கும் விமர்சனம் புதுமை.

தக்கோலம், அ. முஸ்தபா.




* விலைவாசி உயர்வு குறித்து அரசு நிரந்தையுடன் கவனம்செலுத்தாமல்செயல்படுவதைத்தெளிவாக உணர்த்திய கார்ட்டூன் அருமை.

கொணவட்டம்,

கே. ஆர். தேவேந்திரன்.

* 'செடிநிழலில் ஓர் இளைப்பாறல்' நெஞ்சைத் தொட்ட அருமையான சிறுகதை. தன் பதவியையும், உருவத்தையும் பற்றி மட்டமாக நினைக்கும் சக ஊழியர்களின் மத்தியில் தம் மகன் ஸ்டேட் ஃபர்ஸ்ட் வந்தவுடன் இமயமாக உயர்ந்து நிற்கும் துரைசாமி, நம் மனத்திலும் உயர்ந்து விட்டார்.

சென்னை — 45, ஏ. ஜப்பார் காதர்.

* மதிவாணனின் 'பாடுவோம் புதிய கீதம்' புரட்சிகரமாக இருந்தது. கவிஞருக்குப் பாராட்டுக்கள்!

ஆவடி, க. கோபி.

* 'எந்தப் பெண்ணும், தன் புருஷனைப் பங்கு போட இன்னொரு பெண்ணை (சொந்தத் தங்கையானாலும்) அனுமதிக்க மாட்டாள். ஆனால் 'புதிய கல்வெட்டுக்கள்' சிறுகதையில் தன் பொறாமைக் குணத்தால் ஒரு பெண் தன் கணவனைப் பங்கு போடுகிறாள் என்ற எதிர்மறைக் கருத்தைக் காட்டியிருப்பது ஆச்சரியமாகவும் நம்ப முடியாததாகவும் இருக்கிறது!

வேலூர் — 3, ம. செ. நேசன்.

* வெளியில் தெரியாமல் உள்ள பல சுதந்திரப் போராட்ட வீரர்களைப் பற்றிப் படித்தவுடன் என் மனம் நெகிழ்ந்தது. அவர்களை எங்களுக்கு அறிமுகப்படுத்திய கல்கிக்கு மனமார்ந்த நன்றிகள்.

சேத்துப்பட்டு,

எஸ். டேனியல் சந்துரு.

* முதுகெலும்பு குறித்த கருத்துப் படம் குபீரென்று சிரிப்பை வரவழைத்தது. அத்துடன், பொறுப்பான பதவியில் உள்ளவர்கள் பொறுப் பற்றுப் பேசுவது, நகைப்புக்கு இடமாகிவிடும் என்பதையும் சிம்பாலிக்காக உணர்த்தியது.

திருச்சி — 4, தாயு. ஆண்டாள்.

* கல்கி 19.8.90 இதழ் தராசு பதில்கள் பகுதியில் எம். சி. சி. (மெல்போர்ன் கிரிக்கெட் கிளப்) என்று காண்கிறது. இது தவறு. மார்லிபோன் (Marylebone) என்று இருக்க வேண்டும். இது லண்டன் நகரின் ஒரு பகுதி. மெல்போர்ன் ஆஸ்திரேலிய நகரம்.

சென்னை — 17, சுந்தா.

# சிம்சன்: தொழில்துறையில் சிம்மம்



* சிம்சன் இஞ்சின் பொருத்திய டிராக்டரில் அமர்ந்திருப்பவர் அனந்தராமகிருஷ்ணன். அருகே சிவசைலம் — ஆகஸ்ட் 1961 இல் வெள்ளோட்டம்.

SIMPSONS 150 YEARS 1840-1990

அனந்தராமகிருஷ்ணனுக்கு முன்பு, சிம்சன் நிறுவனத்தின் சேர்மனாக இருந்தவர் டபின்யூ. டபின்யூ. லேடன் என்ற ஆங்கிலேயர். சிம்சன் தொழிற்சாலை சைரன் சத்தம் சிந்தாதிரிப்பேட்டை வட்டாரம் முழுக்கக் கேட்கும். காலையில் கேட் அருகே வந்து நின்று கொள்ளுவார் லேடன். தாமதமாக வருகிற ஊழியர்கள் ஓடி ஓடி வருவார்கள். 'பஸ் லேட்டாகி விட்டது!' என்று சொல்லும் ஊழியர்களிடம், 'நீங்கள் வந்த பஸ்ஸுக்கு முன்னாலும் ஒரு பஸ் வந்ததே?' என்பார். ஒழுங்கிலும், கட்டுப்பாட்டிலும் அதிக அக்கறை காண்பித்த மனிதர் இவர்.

●● அனந்தராமகிருஷ்ணன் அவர்கள் சிம்சனில் செயலராகச் சேர்ந்த வருடம் 1930. பிறகு சேர்மன் ஆனார். அவரை 'ஜே' என்றுதான் குறிப்பிடுவார்கள். (அது ஏன் என்று தெரியவில்லை.) 'ட்ரிம்'மாக உடை உடுத்து, 'போ' டை கட்டுவார் பெரும்பாலும். சிறந்த ஜாகுவார் காரில்தான் வருவார். தமது புன்சிரிப்பாலேயே எல்லாரையும் கவர்ந்துவிடும் திறன் இவரிடம் இருந்தது. தினமும், பத்து மணிக்கு வினாடி பிச



* சிம்சன் விழா ஒன்றுக்கு வருகை தரும் அன்றைய ஊழியர் தலைவரை வரவேற்று அழைத்து வருகிறார் நாகராஜன்.

**சுமார் நாற்பது வருடங்களுக்கும் மேலாக சிம்சன் நிறுவனத்தில் பணிபுரிந்துவரும் நாகராஜன், அந்நிறுவனத்தின் 150 — ஆம் ஆண்டு விழாவையொட்டி, தமது அனுபவங்கள் சிலவற்றை நினைவு கூர்கிறார்.**



* சிவசைலம் * அனந்தராமகிருஷ்ணன்

காமல் ஒர்க் ஷாப்புக்கு வருவார். அப்போது நான் கவனித்திருக்கிறேன்: தம்மை 'விஷ்' செய்யும் ஒவ்வொரு ஊழியரையும் திரும்ப விஷ் பண்ணுவார் ஜே. எத்தனை பேர் பண்ணினாலும், அத்தனை பேருக்கும் அந்த மரியாதையைக் காண்பிப்பார்; அலுத்துக் கொள்ள மாட்டார்.

●● சிம்சன் ஊழியர் கூட்டுறவுச் சங்கம் ஆரம்பித்த போது, சிம்சன் வளாகத்திலேயே மேடை போட்டு ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். 'ஜே'யும் பிற அதிகாரிகளும் மேடையில் அமர்ந்திருந்தார்கள். முதலமைச்சராக அப்போது இருந்த ராஜாஜி தலைமை வகித்துப் பேசினார். "சிம்சன் கம்பெனி கூட எனக்கு முன்பே தொடர்பு உண்டு. அவர்களுடைய 'கோச்'சில் நான் சவாரி செய்திருக்கிறேன். அதன் ஸ்பிரிங்குகள் எல்லாம் மிக நன்றாக இருக்கும்...." என்று சொல்லி விட்டு, "தொழிலாளிகளுக்குக் கடன் கொடுப்பதற்காக கோவாபரேடிவ் சொசைடி ஆரம்பித்திருக்கிறீர்கள். அதை நான் வேண்டாம் என்று சொல்ல முடியாது. அதே சமயம் தொழிலாளியின் சம்பளத்திலிருந்து மாதா மாதம் ஒரு குறிப்பிட்ட தொகை சேமிப்புக்காகப் பிடித்துக் கொண்டு வந்தால், அந்தத் தொழிலாளி ஓய்வு பெறும் போது, கடன் வாங்கிய தொகைக்கும், சேமிப்புக்கும் கிட்டத்தட்ட சரியாகிவிடும்!" என்றார். அன்றைக்கு ராஜாஜி சொன்ன யோசனை இன்றும் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது!

●● இந்தியாவிலேயே ஆறு மாத போனஸை சிம்சன் தொழிலாளிதான் வாங்கியிருக்கிறார். தொழிலாளர் குடியிருப்பான ஆர். வி. நகர் உருவாகும் போது நிர்வாகத்திலிருந்து ஒரு கணிசமான தொகையைக் கொடுத்து உதவியிருக்கிறார் 'ஜே'.

●● கணக்கு எல்லாம் படுசுத்தமாக இருக்கும். அதில் 'எதிக்ஸ்' கண்டிப்பாக அநுசரிக்கப்பட வேண்டும். இத்தனை லட்சம் வரி என்றால், அத்தனையும் கட்டிவிட்டு வந்து கொண்டே இருப்பார்கள். இன்று வரை இந்த முறை தொடர்கிறது!

●● 'ஜே' ஓர் அற்புதமான மனிதர். படு சிம்பிள். கடவுள் மீது, சடங்குகள் மீது எல்லாம் நம்பிக்கை உள்ளவர். வெளி நாடுகளுக்குப் போகும் போதும் இவற்றை விட்டு விடாமல் அநுசரிப்பார். அவர் விட்டுச் சென்ற பாரம்பரியத்தை அப்படியே இன்றும் அவரது மகன்கள் திரு சிவசைலமும், திரு. கிருஷ்ணமூர்த்தியும் கட்டிக் காத்து வருகிறார்கள். சிம்சன் உட்பட எல்லா நிறுவனங்களும் மிக நன்றாக நடப்பதற்குக் காரணம் இந்த இரட்டையர்தாம். நிறுவனத்தின் முன்னேற்றம் மட்டுமே இவர்கள் சிந்தனையை ஆக்ரமித்திருக்கும். இதன் பிரதிபலிப்பாக, ஊழியருக்கு எத்தனை நல்லது செய்யலாம் என்றே யோசிப்பவர்கள்!

●● இந்தியாவிலேயே முதல் முதலாக சிம்சனில்தான் தயாரித்தார்கள் என்று சொல்லக் கூடிய ஒரு பட்டியல் போட்டால், அதில் நிறைய ஐட்டங்கள் இருக்கும்: ரயில்வே கோச், ஸ்டீம் கார், ஸ்டீம் பஸ், பெட்ரோல் விட்டு ஓட்டிய பஸ், டீசல் இஞ்சின் என்று நிறையவே இருக்கின்றன. ரூட்ஸ் குருப்பின் 'ஜாகுவார்' கார்கள், 'ஹில்மன்' மிங்க்ஸ் கார் எல்லாவற்றுக்கும் இவர்கள்தாம் ஏகபோக விற்பனையாளர்கள்.

●● சுமார் முப்பது நிறுவனங்கள் கொண்ட அமால்கமேஷன்ஸ் குழுவில், சிம்சனுக்கு அடுத்தபடியாக வயதான இன்னொரு நிறுவனம் அசோசியேட்டட் பிரிண்டிங். 1844 இல் ஆரம்பமானது!

●● சிம்சன் நிறுவனத்தின் 150 ஆம் வருட விழாவையொட்டி அந்த நிறுவனத்தைச் சேர்ந்த ஒவ்வொருவருக்கும் ஒரு கைகடிகாரம் பரிசளிக்கப்பட்டிருக்கிறது. கண்காட்சி ஒன்றும் நிறுவன வளாகத்திலேயே படு சுவாரஸ்யமான விதத்தில் நடக்கிறது. விழாக் கொண்டாட்டங்களைத் தொடங்கி வைத்த குடியரசு தலைவர் திரு. ஆர். வெங்கட்ராமன், சிம்சன் ஊழியர் சங்கத்தின் முன்னாள் தலைவர்!

— சித்தார்த்

---



ஒருவர்: உங்க ஹோட்டல்ல அந்த அறை வாசல்ல உடற்பயிற்சி செய்யும் இடம்னு எழுதியிருக்கீங்களே, ஏன்?

சர்வர்: காசில்லாமல் சாப்பிடறவங்க மாவாட்டற இடம்கறதைத்தான் அப்படி சிம்பாலிக்கா எழுதி இருக்கோம்!

— எஸ். முகம்மது யூசுப்.



**தாய் I — சுஜாதா**
**வாசகர் விமர்சனம்**

# வில்லன்: ரஞ்சனாவின் தாய்தான்!

அளவுக்கு மிஞ்சிய செல்லமும், கண்டிப்பு இல்லாத அன்பும் எந்த அளவுக்குக் கொண்டு போய்'விடும் என்பதைத் தெளிவு படுத்துகிறது தாய் — 1. இந்தக் கதையின் வில்லன் யோகி அல்ல; ரஞ்சனாவின் தாயார்தான். தன் கஷ்டத்தையும் பொருட்படுத்தாது மகள் கேட்டதையெல்லாம் வாங்கித் தந்து, அவளை உதவாக்கரையாக்கிய பெருமை அந்தத் தாயையே சேரும். தான் படும் கஷ்டங்களை மகள் உணராவண்ணம் செய்திருப்பது எத்தனை தவறான செயல்? இதைத் தியாகம் என்று சொல்வதை விட ஒரு வகையான ஆணவம், அல்லது அசட்டுத்தனம் என்றே கூற வேண்டும். ரஞ்சனாவின் அலட்சியப் போக்கு தன்னிஷ்டத்திற்கு எதிராகத் தாயார் எதுவும் செய்து விட மாட்டாள் என்ற நம்பிக்கையையே பிரதிபலிக்கிறது. முடிவும் அதே போன்றே அமைகிறது. அந்தப் பெண்மணி மூர்க்கமாகப் பெண்ணை அடித்துத் துன்புறுகிறாள். ஆனால் அந்தப் பெண்ணின் மனசில் அடி விழவில்லை! அதற்குக் காரணம், இதுநாள் வரை அந்தத் தாயார் மகளைத்தான் வளர்த்திருக்கிறாள்; அவள் உள்ளத்தை அல்ல. பெற்றோரின் கடமை ஆசையோடு வளர்ப்பதில் மட்டுமல்ல, பிரத்யட்ச நிலைமையை உணர்த்திக் கட்டுப்பாட்டுடன் வளர்ப்பதிலும் இருக்கிறது என்பதைக் கதை உணர்த்துகிறது — மறைபொருளாக.

— ஜி. சுவாமிநாதன், சென்னை — 20.

### ஒரு டாக்டரா இப்படிக் கேட்பது?

"வாட் ஹாப்பண்ட் ரஞ்சனா? ஏதும் ப்ரிக்காஷன் எடுத்துக்கலையா?" — இது டாக்டர் சாவித்திரி! பெண்டாஸ்டிக் டாக்டர்!! ப்ரிக்காஷன் எடுத்துக் கொண்டால் சரியாயிடுமா? தப்பில்லையா? ஒரு டாக்டர் இப்படிக் கேட்பது முறையா? **Professional Ethics** இல்லையே? கன்னிப் பெண் ப்ரிக்காஷன் எடுத்துக் கொண்டு கெட்டுப் போகலாமா ஆசிரியரே?

— வி. கமலா, தஞ்சாவூர்.

### தாய்மையில் எத்தனை விதம்!

மகளின் சந்தோஷத்துக்காகச் சந்தனமாகத் தேயும் போது பாசமுள்ள தாய்; கூடப் படிக்கும் மாணவனிடம் ஏமாந்து தாய்மையுற்று நிற்கும் மகளைக் கண்டு சீறி நிற்கும் போது ஆவேசத்தாய்; எப்படியாவது டாக்டரம்மா கருவைக் கலைத்து விட மாட்டார்களா என்று ஏங்கும் போது ஆதங்கத் தாய்; கல்லுளி மங்கத்தனமாக அமர்ந்திருக்கும் மகளை அடித்து நொறுக்கித் தன்னையும் அடித்துக் கொள்ளும் போது கையாலாகாத தாய்; இறுதியில் மகள் திருமணத்துக்காகச் செய்து வைத்திருந்த நகைகளை அவள் பிரசவம் வரை பாதுகாப்புச் செலவுக்குக் கொடுக்கும் பொழுது கடமை மிகுந்த தாய் — அப்பப்பா! ஒவ்வொரு தாயின் வாழ்விலும் இப்படி எத்தனை விதமோ!

— திண்டுக்கல், வி. காமாட்சி.

### THEY JUST DESERVED IT!

இழக்கக் கூடாததை இழந்தது பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசாத தாய். 'இத்தனை நாள் கழிச்சுச் சொல்றியே...' 'எத்தனை மருந்து, மாயம், மாத்திரை எல்லாம் இருக்கு முழுங்கித் தொலைக்கிறதுதானே' என்றெல்லாம் கூறுவது, பாதுகாப்புத்தான் முக்கியம், ஒழுக்கம் அல்ல என்பது போல் இருக்கிறது. ஒரு வேளை Too late என்பதால் ஏற்பட்ட மனக்குமுறலோ! ரஞ்சனாவுக்கு உடற்பசியும், வயிற்றுப் பசி போலத்தான். 'ஏன் அலுப்பிச்சியாம்' 'தாதை தக்கத்தை' என்று பேசும் பெமினாப் பெண்ணுக்குக் குற்ற உணர்வே சிறிதும் இல்லையே! இதுபோன்ற பெண்களுக்கு ஏற்படும் இப்படிப்பட்ட நிலைக்கு எந்த ஆணைக் குறை சொல்வது?



இந்த ரகப் பெண்கள் யாரோடுமே வாழத் தகுதியற்றவர்கள். கண்டித்து வளர்க்கத் தவறிய தாய் பத்துப் பாத்திரம் தேச்சு வளர்த்தேன், பட்டினி கிடந்து படிக்க வச்சேன் என்று புலம்புவதில் அர்த்தமே யில்லை. இவர்கள் இருவர் மீதும் அனுதாபம் வரவில்லை. மாறாக, 'They just deserved it' என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

— க. பாண்டியன், சென்னை.

## நெகிழ்த்தி விடும் தாய்!

இக் கதையில் நாகரிக மோகத்தில், வேகத்தில், ஒரு தாயின் வயிற்றெரிச்சல் கொட்டிக் கொள்ளப்படுகின்றது. பல கஷ்டங்களுக்கு மத்தியில் பெண்ணை வளர்த்து, அவள் ''வான் நட்சத்திரமாய்'' ஜொலிக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பில் தாய் திளைக்கின்ற போது, மகளின் வாழ்க்கை வெறும் ''வளையல் துண்டாய்''ப் போய் விட்டதின் ஆற்றாமை இங்கு சீற்றமாய் வெடித்துச் சிதறுகின்றது. சூழ்நிலையின் விபரீதமும், தாயின் மனத்தவிப்பும் புரியாதிருக்கும் ரஞ்சனாவைப் பார்க்கும் போது, நமக்கும் இரண்டு மொத்து மொத்தத்தான் தோன்றுகிறது. இறுதியில் அத்தனை ஆக்ரோஷ வெளிப்பாடுகளின் போதும் மகளின் ''வாழ்க்கை'' போனாலும் ''வாழ்வு'' (உயிர்) இருக்க வேண்டும் என்ற அந்தத் தாய்மையின் உறுதியான முடிவு நெகிழ்த்தி விடுகின்றது.

— எஸ். எலிஸபெத் ரேவதி, துறையூர்.

## மத்யமருக்குப் பொருந்தாத கற்பனை

சுஜாதாவின் தாய் — 1 மிகைப்படுத்தப் பட்ட கற்பனையே. இதுபோன்ற சம்பவங்கள் மேல்மட்ட வர்க்கத்தினரிடம்தான் நிகழும். தாய் ஒரு பக்கம், தந்தை ஒரு பக்கம் இருக்க, பிள்ளைகள் ஆயாவால் வளர்க்கப் பட்டு, வறுமை தெரியாமல் வளர்க்கப்படும் போது இதுபோன்ற தவறு நேர்ந்தால் விலை கொடுத்து மாப்பிள்ளையை வாங்குவது நிகழும். ஆனால் மத்யமரில், அதுவும்

---

**டாக்டர் பதில்கள்:**

# மஞ்சள்காமாலைக்கு மருந்து உண்டா?

○ **கே. விசாகன், மதுக்கரை, கோவை.**

**உன்மூல நோயையும், அதனால் ஏற்பட்ட Fistula, இவ்விரண்டையும் குணமாக்க, எந்த வைத்தியம் சிறந்தது? மூல நோயால் அவதிப் படுவோர் கடைப்பிடிக்க வேண்டிய வழி முறைகள் என்ன? இந்நோய் வராமலிருக்க எடுக்கப்பட வேண்டிய முன்னெச்சரிக்கைகள் எவை?**

**டாக்டர் எம். எஸ். வெங்கட்ராமன்:**

இந்தக் கேள்வியில் மூல நோயும் **Fistula** நோயும் ஒரே வியாதியாக நினைத்துக் கூறப் பட்டிருக்கிறது. மூலம் என்பது ஆசன வாயில் உள்ள இரத்தக்குழாய்வீங்கி, இரத்தப் போக்கு, அல்லது சதை பிதுங்கி ஏற்படக் கூடிய நோய். பௌத்திரம் அதாவது **Fistula** ஆசன வாயின் அருகே சீழ் பிடிப்பதன் காரணமாக உண்டாகும் ஒரு நிலை. மூல நோய் முற்றாத நிலையில், ஆகாரம் மற்றும் மல இளக்கி மருந்துகள் உபயோகப் படலாம். முற்றிய நிலையில் அறுவைச் சிகிச்சை தேவைப்படலாம். தொடக்கத்திலேயே மருத்துவரிடம் போவதற்கு, மற்றும் ஒரு முக்கிய காரணம் உண்டு. அது மூல வியாதிதான்; வேறு நோய் அல்ல என்று உறுதிப்படுத்திக் கொள்ளலாம். பௌத்திர வியாதியை அறுவைதான் குணப்படுத்தும். மிதமான ஆகாரம், தேகப்பயிற்சி, சரீர சுத்தம்முதலியன இந்நோய்கள் வராமலிருக்க உதவக் கூடும்.

○ **ஜானகிமைந்தன் எஸ். ராஜகோபால், திருச்சி — 16.**

**ஒருவருக்கு 'பயாப்ஸி' டெஸ்ட் செய்தார்கள் என்றால், புற்றுநோய் தோன்றியிருக்கிறதா என்பதை அறியத்தானா? இல்லை, வேறு காரணங்கள் ஏதேனும் உண்டா?**

'பயாப்ஸி' பரிசோதனை, புற்றுநோய் தவிர, காசநோய் போன்ற பல வியாதிகளைக் கண்டுபிடிக்கவும் உதவும். தவிர, புற்றுநோய் வரக்கூடிய நிலை (**Pre-Cancer Stage**) உருவாகியிருந்தால், அதையும் கண்டுடறிந்து, புற்றுநோய் வருமுன் பூண்டோடு அழிக்க உதவும்.

○ **அ. சண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.**

**மஞ்சள் காமாலை நோய், ஆங்கில வைத்**

கணவனைப் பிரிந்து தனியாக நிற்கும் பெண், தன் ஒரே மகளின் ஒவ்வொரு அசைவையும் உன்னிப்பாய்க் கவனிப்பாள். பெண் பருவமடைந்ததும் மிகவும் ஜாக்கிரதையாக இருப்பாள். எங்கும் தனியே அனுப்ப மாட்டாள். மாதம் வரும் மூன்று நாட்களைத் தவறாது கவனிப்பாள். இப்படி பதினாறு வாரங்கள் தவற விட மாட்டாள். நடுத்தர வர்க்கத்துப் பெண் கல்யாணம் ஆகும் முன் கர்ப்பவதியாவதைச் சாதாரணமாக நினைத்துக் கூடப் பார்க்க மாட்டாள். இது யதார்த்தத்துக்கு ஒட்டாத கற்பனையே.

— எஸ். பி. அழகப்பன்,
உடுமலைப்பேட்டை.

**அப்பாவியைக் குற்றவாளியாக்குவது ஏன்?**

ஒரு பெண்ணை ஏமாற்றிய கயவனை இந்தச் சமுதாயத்தின் முன் குற்றவாளியாக நிறுத்துவதை விட்டு விட்டு, ஆசைக் கனவுகளை வளர்த்துக் கொண்டு இளமையை ஒருவனிடம் இழந்து நிற்கும் அந்த அப்பாவிப் பெண்ணைக் குற்றவாளியாக்குவது ஏன்? குற்றவாளியாக்க வேண்டும் என்ற ஒரே காரணத்திற்காக அப் பெண்ணை அகம்பாவம் பிடித்தவளாகச் சித்திரித்திருப்பது யதார்த்தத்திற்குப் புறம்பானது. அந்தப் பெண்ணிடம் சீறும் தாய், கோபம் கொள்ளும் டாக்டர் இவர்கள் பார்வையின் உக்கிரம் ஏன் அப் பெண்ணை ஏமாற்றிய கயவனின் மீது திரும்பவில்லை? கதையின் முடிவு பெண்களை ஏமாற்றி கெடுக்கும் ஆணுக்கு ஊக்கமளிப்பதாகவே உள்ளது.

— எஸ். உமாகாந்தன், சென்னை.

**ரூ. 50 பரிசு பெறுபவர்:**
**ஜி. சுவாமிநாதன்,**
**ஃபிளாட் 16, 'ராம்ஸ்' அபார்ட்மெண்ட்**
**39, 3 வது மெயின் ரோடு,**
**கஸ்தூர்பா நகர், சென்னை — 20.**
**மற்ற கடிதங்கள் ஒவ்வொன்றும் ரூ. 25/— பரிசு பெறுகின்றன.**

**திய முறையில் குணமாகப் பல வாரங்கள் ஆகும். சில பாரம்பரிய வைத்தியர்களிடம், பஸ்பம் முதலியவை சாப்பிட்டால் நான்கைந்து நாட்களில் குணமாகும் என்று மக்களிடையே பரவலாகக் கருத்து உள்ளது. மருத்துவரின் அறிவுரை என்ன? ஜாண்டிஸ் வராமல் தடுப்பது எப்படி? மருந்து என்ன?**

**டாக்டர் வ. நம்பி:** ஜாண்டிஸ் எனப்படும் மஞ்சள் காமாலை நோய் பல வகைப்பட்டது. சில வகை சீக்கிரம் குணமாகும்; சில வகை நாளாகும். வைரஸ் கிருமிகளினால் இது வருகிறது. வைரஸ் கிருமிக்கு மருந்து எதுவும் கிடையாது. ஆங்கில மருத்துவ முறையில், ரத்தப் பரிசோதனை மூலம், சரியாகி விட்டதா இல்லையா என்று தெரிந்து கொள்ள முடிகிறது. மஞ்சள் போயிருக்கலாம். ஆனால் நோய் போகாமல் இருக்கலாம்! இதனால் பின் விளைவுகள், மகோதரம் போன்ற நோய்கள் வராமல் தடுக்க முடிகிறது. இந்த மருத்துவப் பரிசோதனை மூலம் கிடைக்கிற பலன், மற்ற வைத்திய முறைகளில் கிடைக்காது.

ஜாண்டிஸ் வராமல் இருக்க இரண்டு வகைகளில் செயல்படலாம். ஒரு வகை, மஞ்சள் காமாலை உணவு மூலம் பரவுகிறது என்பதால், தண்ணீரை நன்றாகக் காய்ச்சிய பிறகே குடிக்க வேண்டும்; சுகாதார முறைப்படி சமைக்கவும், சாப்பிடவும் வேண்டும். இன்னொரு வகை, இரத்தம் மூலம் பரவுகிறது. அதாவது ஒருவருடைய இரத்தம் இன்னொருவருக்குச் செலுத்தப்படும் போது. இதை, டாக்டர்கள் விழிப்புணர்வுடன் செயல்பட்டால் தடுத்து விடலாம். ஜாண்டிஸுக்கு மருந்து கிடையாது.

○ **எம். செல்வராஜ், கொக்குமடைப் பாளையம்.**

**இரத்தத்தில் சர்க்கரையின் அளவைப் பார்ப்பதற்கும், சிறுநீரில் சர்க்கரையின் அளவைப் பார்ப்பதற்கும் என்ன வித்தியாசம்? இப்பரிசோதனையின் அவசியம் என்ன?**

பொதுவாக, இரத்தத்தில் இருக்கும் சர்க்கரையின் அளவுதான் சிறுநீரிலும் தெரியும். ஆனால், ஒரு சிலருக்கு அமைந்திருக்கும் சிறுநீரகத்தின் தன்மையினால், சிறுநீரில் சர்க்கரை இருப்பது தெரியாது; அல்லது இருக்காது. ஆனால் ரத்தத்தில் அதிகமாக இருக்கும்! அதனால்தான் இரண்டையும் பார்க்கிறோம். இந்தப் பரிசோதனையின் அவசியம்: எந்த அளவுக்குச் சர்க்கரை கட்டுப்பாட்டில் இருக்கிறது என்று அறிந்துகொள்ள உதவுவதுதான்.

தொகுப்பு: **சாருகேசி**



ஆரோக்கிய ரகசியம்: 21

வி. என். குமாரசாமி.

# உடல், மனம், ஆன்மா!

**சா**ந்தி ஆசனத்தின் போது உடலைத் தளர்த்துவதால் ஏற்படும் பலன்கள் அபரிமிதம். நாம் கையைக் காலை அசைக்கும் போதெல்லாம் அங்கே சக்தி செலவாகிறது. உடல் உறுப்பு மீண்டும் சக்தி பெற வேண்டும். இதற்குரிய ரசாயன மாற்றங்கள் நிகழ்கின்றன. அதற்கு உதவப் பிராணவாயு வேண்டும். அந்தப் பிராண வாயுவை உடல் பாகங்களுக்குக் கொண்டு செல்வது ரத்தமே. இதனால்தான் ஓடினாலோ அல்லது சுறுசுறுப்பாகச் சரீரத்தைப் பயன்படுத்தி உழைத்தாலோ அல்லது வேகமான தேகப் பயிற்சிகளைச் செய்தாலோ இருதயத் துடிப்பு அதிகரிக்கிறது; பெருமூச்சும் விடுகிறோம். அப்போது உழைப்பினால் உடல் தசைகள் வெளியேற்றிய கரியமில வாயுவை ரத்தம் வாங்கிக் கொண்டு பதிலுக்குப் பிராண வாயுவை அளிக்கிறது. தசைகள் புதிய சக்தி பெறுகின்றன. ரத்தம்நுரையீரலுக்குவந்து,கரியமில வாயுவை மூச்சுக்காற்று மூலம் வெளியேற்றிப் பிராண வாயுவைப் பெறுகிறது.




நாம் முன்னர் செய்த ஆசனங்களால் உடல் அவயவங்களை நீட்டியும் மடக்கியும் வளைத்தும் நிமிர்த்தியும் வேலை வாங்கினோம். அதற்கெல்லாம் பிரதியாக, சாந்தி ஆசனத்தில்உடல்உறுப்புக்களுக்குத்தளர்ச்சியைக் கொடுத்துப் புத்துயிர் அளிக்கிறோம்.

**வ**ளரும் குழந்தையைப் பாருங்கள். ஒரு சிறு காரியம் செய்துவிட்டாலும் பெற்றோரிடம் பெருமையாக அதனை உணர்த்தும். பேசத் தெரியாத சின்னஞ்சிறு குழந்தைக்குக் கூட இந்த இயல்பு உண்டு. அப்போது குழந்தையை மெச்சி நமது சந்தோஷத்தைக் காட்டாமல் இருப்போமா? அப்படிப் பாராட்டாத மூடர்களாக நாம் இருந்தால், குழந்தையும் சோர்வடையும். தன்னம்பிக்கையுடன் மனம் வளர்ச்சி பெறுவதற்குப் பதில் ஏமாற்றத்தில் சுருண்டு கொள்ளும். அதேபோல்தான் உடலின் உறுப்புக்களும். இதுவரை ஆசனங்கள் செய்ய நம்முடன் ஒத்துழைத்த அவற்றை மானசீகமாகப் பேசித் தட்டிக் கொடுக்க வேண்டும். தளர்ந்து ஓய்வெடுக்கச் செய்ய வேண்டும். அப்போதுதான் உடல் உறுப்புக்கள், களைப்பு நீங்குவதுடன் உற்சாகமடைந்து பூரண சக்தியும் பலமும் பெறும். தளர்ந்த தசைகளுக்கும் இதர அவயவங்களுக்கும் ரத்தம் இலகுவாகப் பாய்ந்து, பிராண வாயுவை வழங்கி அவற்றின் களைப்பைப் போக்கும்.

**ம**னத்தின் வடிவமே மனிதன் என்று மனோதர்ம சாஸ்திரம் கூறுகிறது. 'மனம் வைத்தால் ஆகாத காரியம் இல்லை' என்றது இதைத்தான். மனத்தின் வலிமை மகத்தானது. வெற்றிக் கதைகள் எதை வேணுமானாலும் படித்துப் பாருங்கள். கதாநாயகனுக்கு ஓர் இலக்கு இருந்திருக்கும். 'அதனை அடைந்தேதீருவது' என்றமனமும்இருந்திருக்கும். எனவேதான், சாந்தி ஆசனத்தின்மூன்றாவதுநிலையான 'ஜெபம்' முக்கியமானது. ஒவ்வோர் அவயவமாக நினைத்துப் பார்த்து, அதைப் புகழ்ந்து, நன்றி கூறி, கடமையை உணர்த்தி, மனோசக்தி ஊட்டி, சாந்தி அளித்து அவற்றைத் தளர்த்துதல் எளிதல்ல. செய்து பார்த்தால் புரியும். விரல், பாதம், கெண்டைக்கால், முழங்கால் என்று வருவதற்குள் மனம் வேறு இடத்துக்குச் சென்று எதை எதையோ நினைத்துக் கொண்டிருக்கும்!




அப்படி விலகிச் செல்லும் மனத்தை மறுபடியும் நிலைக்குத் திருப்புவதுடன், ''மனமே! எங்கெங்கோ தன்னிச்சையாய்ச் செல்கின்றாயே! இனி இம்மாதிரி நடக்காதே! ஒழுங்காய் என் கருத்துப்படி நடந்து கொள்!'' என்று அதனை உற்சாகப்படுத்தியும் கண்டித்தும் பழக்க வேண்டும்.

எனவே, சாந்தி ஆசனத்தில், உடலைத் தளர்த்தி, அவயவங்களுக்கு ஓய்வளித்து, புத்துணர்ச்சி பெறச் செய்வது மட்டுமல்ல; மனத்தை அடக்கி ஒரு நிலைப்படுத்தவும் மார்க்கம் இருக்கிறது! இது எவ்வளவு பெரிய விஷயம் என்பதை விளக்கத் தேவையில்லை. சாந்தி ஆசனத்தின் போது மனம் பெறும் இந்தப் பயிற்சியானது, நமது ஒவ்வொரு காரியத்தையும் கருத்தூன்றிச் செய்ய உதவும். வாழ்நாள் முழுதும் கடமைகளை ஒழுங்காக நிறைவேற்ற நமக்குத் துணை நிற்கும்.

சாந்தி ஆசனத்தைச் சிறப்பாகச் செய்பவர்கள் முகத்தில் கடுமை ரேகைகள் மறையும். சாந்தம் நிறைந்த ஆரோக்கிய ஒளி பரவும். கோபம், காமம் முதலியவற்றை வெற்றி கொள்வர். 'எந்த விஷயமும் நம்மை மீறி நடப்பது என்பது இனி இல்லை' என்று தன்னம்பிக்கையுடன் திடபுருஷர்களாக விளங்குவர்.

**சி**ல உடல் உபாதைகள் உள்ளவர்கள் யோகாசன நிபுணர்களின் நேரடி மேற்பார்வையில் ,ஆசனம் செய்து வருகிறார்கள் எனில், அவர்கள் நோயுற்றுள்ள உறுப்புக்கு வந்ததும் அங்கே மனதைச் சற்று நேரம் அதிகமாகவே நிலைநிறுத்தி, அந்த நோயை விலகிப் போகுமாறு சொல்ல வேண்டும். உதாரணமாக: ''ஏ, வயிறே! நீ நோயற்றுச் சுகமாக வாழ்வாயாக! நோய் இதோ, உன்னை விட்டுச் செல்கிறது. இனி உன்னை அணுகாது., சுகமாய் இருப்பாய்! நோயே! விலகி ஓடு!'' என்றெல்லாம் மானசீகமாகப் ''பேச'' வேண்டும். இப்படிச் சில நாள் செய்து வந்தால், நோய் விலகுவதைப் பிரத்யட்சமாக உணரலாம். இதேபோல் கவலைகளையும் ''பேசி'' விரட்டலாம். ''மனமே! கவலைப்படுவதால் ஒரு பலனும் இல்லை; ஆக்கபூர்வமாகச் சிந்திப்பேன்; பிரச்னைகளை வெற்றி கொள்வேன்'' என்று நமக்கு நாமே கூறிக் கொள்ளலாம்.

கடைசியில் மனதைப் புருவ மத்தியில் நிறுத்தித் தியானத்தில் இருப்பது சாந்தி ஆசனத்தின் நான்காவது நிலை. இந்த இறுதி நிலையில் சாதகர்களுக்கு உடலுடன் மனமும் மனத்துடன் ஆன்மாவும் பயனடைகின்றன. உடலினால் மனமும், மனத்தினால் உடலும் பரஸ்பரம் பயன் பெறுகின்றன எனில், இவை இரண்டும் பலம் பெற்று, ஆன்மாவையும் பலப்படுத்துகின்றன.

ஆக, உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றுக்கும் ஒரே சமயத்தில் நற்பலன்களை அள்ளித் தருவது சாந்தி ஆசனம்.

**சா**தகர்கள் அவரவர் நிலைமைக்கு ஏற்ப சாந்தி ஆசனத்தை, இரண்டு — மூன்று நிமிஷங்களிலிருந்து, ஐந்து — பத்து நிமிடங்கள் வரை அல்லது, நேரமிருந்தால் அதற்கு அதிகமாகவும் செய்யலாம். ஆனால் தூங்கிவிடக் கூடாது! பலன் கிடைக்க வேண்டுமானால் விழிப்பு நிலையில் இருக்க வேண்டும்.

சாந்தி ஆசனம் வேண்டிய வரை செய்து முடித்த பிறகு, உடனே, 'சடக்'கென்று எழுந்துவிடக் கூடாது. முதலில், 'எழுந்திருப்போம்' என்று நினைக்கவேண்டும். உடலைப் பக்கவாட்டில் திருப்பிக் கொள்ள வேண்டும். பிறகு எழுந்து உட்காரலாம். பல வினாடிகள் கழித்து எழுந்து நிற்கலாம். வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருப்பது கூடாது.

(தொடரும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka



